# ஆனந்தபோதினி

ஒரு சிறந்த மாதாந்தத்
தமிழ்ச் சஞ்சிகை.



" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.

(தொகுதி 18)

ஆங்கீரஸ௵ ஆடி௴ முதல் ஸ்ரீமுக௵
ஆனி௴ வரையில்
1932௵ ஜூலை௴ முதல் 1933 ஜூன்௴ வரையில்

நா. முனிசாமி முதலியார்,
" ஆனந்தபோதினி " ஆபீஸ்,
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு,
சௌகார்பேட்டை, மதராஸ்.



காலிகோ பைண்ட் விலை ரூபா 1—6—0 } 1933. { தபால் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS

From Rao Saheb Late T. Ramakrishna Pillai Avl., B.A., F.M.U., F.R.H.S., Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of "Ananda Bodhini" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the Journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the Journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915.*
THOTTAKADU HOUSE. } (Sd.) T. RAMAKRISHNA PILLAY.

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, now Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "**Ananda Bodhini**." It is conducted on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.* } (Sd.) A. C. PRANATARTIHARA IYER.

We have received the current number of the Tamil monthly "**Ananda Bodhini,**" containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—*Hindu 22-9-15.*

Dear Sir.

Your Tamil monthly entitled "ANANDA BODHINI"..............................is written in *easy*, *clear* and *readable* style, *well-suited*, *particularly*, to *ladies* who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be *read* and *re-read* from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number *i.e.* pages 288 and 289. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes, ... ... ... ... ... It is very much to be envied that there should be over 10000* subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

Trivandrum, } A. V. SUBRAMANIA AIYAR,
21-1-17. } F.N. S.A. (Lon.), F.C.I. (Birm.)

* Now more than 20 Thousands.

# ஆனந்தபோதினி

## 18-ம் வருடத்திய விஷய அட்டவணை.

| விஷயங்கள் | பக்கங்கள் |
|---|---|

| விஷயங்கள் | பக்கங்கள் |
|---|---|

| விஷயங்கள். | பக்கங்கள். |
|---|---|
| நந்தன் ஓர் பஞ்சமன் | 612 |
| ஆரம்பகல்வியும் பெற்றோரும் | 619 |
| ஆத்திசூடி உதாரணக் கதைகள் | 622 |
| செய்நன்றி அறிதல் | 625 |
| பசுவின் பெருமை | 626 |
| வைசூரியைத் தடுக்கும் வழி | 627 |
| ஐய வினாவிற்கு விடை | 631 |
| அநாதைப் பெண்கள் சாலையம் | 643 |
| அன்னமும் அன்றிலும் | 653 |
| "சொன்னால் சொல்லட்டும்" | 661 |
| ரசாயன சாஸ்திரம் | 685 |
| வயிரவர்களின் மகாநாடு | 691 |
| ஆத்திசூடி உதாரணக் கதைகள் | 699 |
| சிறுவர்கள் விளையாட்டுக்கள் | 702,765,897 |
| நீதிபரிபாலனம் | 704 |
| சோதிடப்பகுதி | 706 |
| கடவுள் பக்தியா காட்டுமிராண்டித்தனமா | 723 |
| கொம்பார் சோலைக்குயில் | 728 |
| உள்ள நூல் | 732,930 |
| புராணப் புதையல்கள் | 735 |
| விதுரர் விருந்து | 737 |
| அண்ணாஸாமியின் அதிர்ஷ்டம் | 743 |
| கந்தப்பன் காதல்! (பாட்டு) | 755 |
| ஓய்வு வேளை | 759 |
| தாகூரின் இலக்கியத் திறமை | 762 |
| சுற்றந் தழுவுதல் | 788 |
| உத்தம ஆலயங்கள் | 803 |
| நேயர்கட்கு ஒரு வேண்டுகோள் | 807,887 |
| திருவாசகம் என்னும் தேன் | 808 |
| இராமாயணமும் கந்தபுராணமும் | 812,893 |
| ஸ்ரீரங்கம் அத்தியயனோற்சவத் தத்துவம் | 825 |
| தன்னிஷ்ட சுயாதீனத் தாண்டவம் | 833 |
| திருப்பத்தூர் தாலூகா ஆரம்ப ஆசிரியர் நிலை | 843 |
| இசைப்புலவர் தான்சென் | 846 |
| "ஆலய தத்வமும் ஆகமப் பித்தமும்" | 849 |
| காதல் | 855 |
| புத்தரும் அவரது தத்துவங்களும் | 861 |
| தமிழ்ப்பண்டிதர் மகாநாடு | 883 |

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 18 } ஆங்கீரஸஸு ஆடிமீ கஉ } பகுதி 1
1932ஸு ஜூலைமீ 16உ

## கடவுள் வணக்கம்.

பிரியாத தண்ணருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மையை யளித்தனையென் மனதறப்
பேரம்பலக் கடவுளாய்
அறிவா யிருந்திடும் நாதவொலி காட்டியே
அமிர்தப்ர வாகசித்தி
அருளினை யலாதுதிரு வம்பலமு மாகியெனை
யாண்டபினெய்தி நெறியாய்க்
குறிதா னளித்தனைநன் மரவுரிகொ ளந்தணக்
கோலமா யசபாநலங்
கூறினபின் மௌனியாய்ச் சும்மா விருக்கநெறி
கூட்டினை யெலாமிருக்கச்
சிறியேன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட தறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே. (1)

சொல்லற் கரிய பரம்பொருளே சுகவா ரிதியே சுடர்க்கொழுந்தே
வெல்லற் கரிய மயலிலெனை விட்டெங் கொளித்தாயா கெட்டேன்
கல்லிற் கசிய நாருரித்துக் கடுகிற் பெரிய கடலடைக்கும்
அல்லிற் கரிய அந்தகனுர்க் காளாக் கினையோ அறியேனே. (2)

ஆயிரஞ்சொன் னாலும்அறியாத வஞ்ச நெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் திருவருளின் பேறுவாய்ந்த தாம் அஞ்ஞானியாதல் இல்லை என்று கூறுகின்றார்.

(இ-ள்.) நீங்காத தண்ணிய அருளையுடைய சிவஞானியாய் வந்து, சொல்லுதற்கரிய வாயுதாரணையினால் பேரின்ப வுண்மையினை அருளினை. எனது மனம் ஒடுங்கப் பேரம்பலக் கடவுளாகி அறிவுருவா யிருக்கின்ற நாத வோசையினைக் காட்டி அமிர்தப் பெருக்கின் பேற்றினை அருள் செய்தாய். அன்றியும் திருவம்பல ரூபமாகி என்னை ஆட்கொண்டருளினை. பின்னர் வந்து முறைமையாய் இலக்கையும் அருள் செய்தாய். சிறந்த மரவுரியினைத் தரித்த அந்தண வடிவமாகி, அஜபா மந்திரத்தை எனக்கு உபதேசித்த பிறகு மௌனியாகிச் சும்மா இருக்குமாறு நன்னெறிக் கண் சேர்த்தாய். இவைக ளெல்லா மிருக்கச் சிறியேனாகிய நான் மயக்கங்கொண்டு மிகுதியும் அஞ்ஞானி யாய்விடுவேனோ? தேடுதல் அரிதான உண்மையாகி என் மனத்திற் குடிகொண் டிருக்கிற ஞானரூபமாகிய கடவுளே! தேஜோ மயமான இன்பமே! என்க.

அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாயுள்ள சிவம் ஆன்மா பக்குவ மடைந்த நிலையில் குருமூர்த்தியாய் எழுந்தருளு மாகையால் சிவஞானியாய் வந்து எனவும், அம்மூர்த்தி பிராணாயாமம் முதலிய போதித்துப் பரம்பொரு ளின் தன்மையை விளக்கு மாகலின் "வாசியாலே பேரின்ப வுண்மையை அளித்தனை" எனவும், பின்னர் தத்துவங்களைக் கடந்து அறிவு மாத்திரை யாக நின்று இச்சாஞான சொரூபிணியான அவிநாபாவ சத்தியின் சகத்தி ராம்சமான நாத உண்மையினை விளக்கினை என்பார் அறிவாயிருந்திடும் நாதவொலி காட்டி எனவும், பின்னர் பிரமரந்திரத்திலுள்ள அமிர்தப் பிர வாகத்தால் நிரம்பச் செய்தனை என்பார் அமிர்தப் பிரவாக சித்தி அருளினை எனவும் கூறினார். முதலடியில் முதற்சீரில் எதுகை நயம் நோக்கி "பிரி யாத" என்பது "பிறியாத" என்று கொள்ளப்பட்டது.

2. இதனால் தாம் மயக்கத்தில் அழுந்தி யிருப்பதை உணர்ந்து பரம் பொருளின் அருளை நாடுகிறார்.

(இ-ள்.) வாக்கினா லெடுத்துக் கூறுதற் கருமையான மேலான பொருளே! ஆனந்த சாகரமே! சோதிக்கொழுந்தே! நீங்குவதற் கருமையாகிய மாக்கத்தில் அடியேனை வி[illegible]த்து, எவ்விடத்து மறைந்தனை? கல்லினிடத்துப் பசுமையான நாரினை உரித்து, கடுகினிடத்துப் பெரிய கடலினை அடைத்த லில் வல்லவனான கரிய யமனார்க்கு அடிமை யாக்கினையோ? ஒன்றும் உணர் கிலேன் என்க.

3. ஆயிரம் விதமாக எடுத்துச் சொன்னாலும் அறிவு அடையாத வஞ்சக மனத்தையுடைய பேயருடன் சேர்ந்தால்—அச் சேர்க்கை குற்றமே யாகும் என்க.






# "ஆனந்தபோதினி"யின் 18-வது ஆண்டு.

———:(o):———



அங்கிங் கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கின்றவனும், கருணையங் கடலுமான இறைவன் திருவருளால் நமது 'ஆனந்தபோதினி'க்குப் பதினேழாம் ஆண்டு முடிந்து 18-வது ஆண்டு பிறந்துவிட்டதைக் கண்டு அளவிலா ஆனந்தமடைகிறோம். நமது அபிமானிகளனைவரும் நம்மைப்போலவே மகிழ்ச்சியடைவார்களென்றும் நம்புகின்றோம். ஒரு நாட்டின் ஜனசமூகத்தின் முன்னேற்றத்துக்குப் பத்திரிகைகளே இன்றியமையாச் சாதனமாமென்பதை யுணர்ந்து நமது சந்தா நேயர்கள், 'ஆனந்தனை' அன்புடன் ஆதரித்து வருவதுடன், தங்களுக்குள்ள அபிமானத்தின் மேலீட்டால் ஒவ்வொருவரும் தங்கள் தங்களாலியன்ற சந்தா நேயர்களைச் சேர்த்துக் கொடுத்தும் செய்துவரும் உதவிக்கு நாம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர்களாகின்றோம். நமது சந்தா நேயர்களுக்கு நமது ஆனந்தனிடம் இருப்பதுபோன்ற பற்றுதலும் அபிமானமும் மற்றப் பத்திரிகைகளின் சந்தாதாரர்களுக்கு அப்பத்திரிகைகளிடம் இல்லையென்று கூறுவதும் மிகையாகாது. இதர சில மாத சஞ்சிகைகளுக்கு இருப்பதுபோன்ற போஷகர்களோ அல்லது குறிப்பிட்ட சமூகத்தினரின் பிரத்யேக துணையோ, அல்லது மடாதிபதிகள், ஜமீன்தாரர்கள், பிரபல சங்கங்கள் போன்ற உதவியோ இல்லை யென்பது

அனைவருக்கும் தெரிந்த விஷயம். நமது ஆனந்தபோதினி, ஜாதி மத வித்தியாச மின்றித் தமிழர்களான அனைவருக்கும் தொண்டுசெய்ய வேண்டுமென்னும் எண்ணத்துடன் வெளியிடப்படுவதால் தமிழர்களனைவரும் இதை ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர் என்பதை நாம் கூறுவது அநாவசியமென்றே கருதுகிறோம் மதம், சமூகம், அரசியல், மொழிவளர்ச்சி, முதலிய பல துறைகளிலும், நம் மக்கள் அறிவு விளக்கம் பெற்று உயரியதும், பரிசுத்தமானதுமான வாழ்க்கையை நடத்தி இகபரத்திலும் இன்பத்தை யடையவேண்டும் என்பதே 'ஆனந்தபோதினி'யின் தலை சிறந்த நோக்கமாகும். மேலும் ஆண்டு ஒன்றுக்கு ஒரு ரூபாயாகிய இவ்வளவு குறைந்த சந்தாவில் **80** பக்கங்களுடனும், ஆன்ற அறிஞர்களின் கட்டுரைகளுடனும், விசித்திரப் படங்களுடனும் இச்சஞ்சிகையை வெளியிடுவது எவ்வளவு சிரமமென்பது சற்று சிந்தித்துப் பார்ப்பவர்களுக்கு விளங்காமற் போகாது. அவ்வாறிருந்தும் நாளுக்குநாள் நமது சஞ்சிகையில் பலவித அபிவிருத்திகள் ஏற்பட்டுவருவது சந்தா நேயர்கள் அறிந்த விஷயமே. இவ்வளவு கஷ்ட நஷ்டங்களினிடையிலும் நாடும், சமூகமும் முன்னேற்றமடைய வேண்டுமென்னும் ஒரே நோக்கத்துடன் நாம் தொண்டாற்றி வருவதால் எமக்கு மேன்மேலும் உற்சாகத்தையும் ஊக்கத்தையும் அளித்து ஆதரிக்கவேண்டியது எம்மிடம் அன்புமிக்க நேயர்களின் பொறுப்பு என்பதை யாம் கூறவேண்டியதில்லை.

சென்ற பதினேழாம் ஆண்டில், நம் போதினி இதற்குமுன் இருந்ததைவிட மற்றும் பலவித விசேஷ அம்சங்களோடு வெளிவந்து வாசகர்களுக்கு மகிழ்ச்சி யூட்டிவந்த விஷயம் நேயர்கள் அறிந்ததே. பதினெட்டாவது ஆண்டாகிய இவ்வாண்டு முதல் இன்னும் சிறந்த முறையில் நமது 'ஆனந்தபோதினி'யை வெளிப்படுத்திச் சந்தாநேயர்கள் மகிழ்ச்சிப் பெருக்கடையும்படி செய்ய ஏற்பாடு செய்திருக்கின்றோம். சமயம், மொழி, சமூகம், அரசியல், விவசாயம், கைத்தொழில், வியாபாரம், கூட்டுறவு, விகடம் முதலிய துறைகளில் சிறந்த அனுபவம் வாய்ந்த பேரறிஞர்களின் கட்டுரைகள் மாதந்தோறும் வெளிவரும். அறிவையும், சிரிப்பையும் தரத்தக்க விகடப்படங்களும், சமூக சீர்திருத்த சம்பந்தமான படங்களுடன் கூடிய சிறுகதைகளும் அத்துறையில் ஆற்றலுடையவர்களைக் கொண்டு வெளியிடப்படும். ஆதலால் இவ்வளவு சிறந்த முறையில் வெளியிடப்பெறும் இச்சஞ்சிகையின் சந்தா நேயர்களாகத் தமிழர்களனைவரும் சேர்ந்து

'ஆனந்தபோதினி'யால் ஏற்படக்கூடிய பலனை அனுபவிக்க வேண்டு மென்று பெரிதும் வேண்டிக்கொள்கின்றோம்.

தங்களுக்குள்ள பற்பல காரியங்களுக்கிடையிலும் 'ஆனந்த போதினி'யின்பால் அன்புகூர்ந்து விஷயதானம் செய்துவரும் அறி ஞர்களுக்கும், சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பியும், வி.பி.யில் பெற்றும், ஆதரித்துவரும் இதர அன்பர்களுக்கும், புதிதா கச் சேர்ந்துவரும் சந்தாநேயர்கட்கும், எம்மிடம் நம்பிக்கையும், பூரண அபிமானமும் வைத்து ஜீவிய சந்தாதாரர்களாகச் சேர்ந்துள்ள செல் வர்களுக்கும் எமது மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள் கின்றோம். நமது 'ஆனந்தனை' அன்புடன் ஆதரித்துவரும் ஒவ் வொரு அன்பரும் குறைந்த பட்சம் ஒவ்வொரு சந்தா நேயரை யேனும் புதிய ஆண்டின் ஞாபகார்த்தமாகச் சேர்த்துக்கொடுக்கு மாறு மறுமுறையும் அவர்களைப் பெரிதும் வேண்டிக்கொள்ளுகின் றோம்.

'ஆனந்தபோதினி'யின் சந்தா நேயர்களும், வாசகர்களும், விஷயதானம் புரியும் அறிஞர்களும், அபிமானிகளும், நோயற்ற வாழ் வும் குறைவற்ற செல்வமும் பெற்றுப் பல்லாண்டு வாழுமாறு எல் லாம் வல்ல இறைவனை அனுதினமும் பிரார்த்திக்கின்றோம்.

———:(o):———

## ஸ்தல ஸ்தாபன ஊழல்கள்.



வோட்டர்களின் பொறுப்பு என்பது பற்றி யாம் சென்ற மாத சஞ்சிகையின் தலையங்கத்தில் எழுதிய வியாசத்தில் ஸ்தல ஸ்தாபனங்கள் என்று சொல்லப்படும் ஜில்லா போர்டு, தாலூகா போர்டு, முனிசிபல் சபை முதலியவற்றின் தேர் தல் காலங்களில் நடைபெறும் அக்கிரமங்களைப் பற்றி விவரித்திருந் தோம். ஸ்தல சுயஆட்சி எனப்படும் அந்த ஸ்தாபனங்கள் சரிவரத் தங்கடமையை நிறைவேற்றவில்லை யென்றால் நாட்டுக்கு எத்தகைய சிறப்பான முறையில் ஆட்சித் திட்டம் அமைக்கப்பட்டாலும், அல் லது வாக்காளர்களின் தொகை எவ்வளவுதான் அதிகரிக்கச் செய்தா லும் அவற்றாலெல்லாம் எத்தகைய நலனும் உண்டாகா தென்பதும் அத்தலையங்கத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது நேயர்கள் நினைவிலிருக்க லாம். இத்தலையங்கத்தில் ஸ்தல ஸ்தாபனங்களில் நடைபெறும்

ஊழல்களைப் பற்றி விவரித்துரைக்க விரும்புகின்றோம். இவ்வாறு எழுதுவதனால் ஸ்தல ஸ்தாபனங்களின் தலைவர்களைப் பற்றிக் குறை கூறவேண்டுமென்பது எமது கருத்தன்று. ஸ்தல ஸ்தாபன நிர்வாகத்தில் மலிந்துகிடக்கும் ஊழலகள் நிவர்த்தியாகித் தேசத்தின் சுதந்தரத்துக்கு அஸ்திவாரமான ஸ்தல சுயஆட்சி பலராலும் மெச்சத்தக்க வகையில் நடைபெறவேண்டுமென்பதும், இத்தகைய ஊழல்கள் நமது 'ஆனந்தபோதினி' போன்ற-பெரும்பாலான வாக்காளர்களின் கைக்குக்கிட்டும் பத்திரிகையில் வெளியாகி அவை வாக்காளர்கள் விழித்துக்கொள்ளும்படி செய்யவேண்டு மென்பதுமே எமது பேரவா.

ஜில்லா, தாலூகா போர்டுகளும், முனிசிபல் சபைகளும் அந்தந்தப் பிரதேசத்தில் வசிக்கும் பொது ஜனங்களின் சௌகரியத்தைக் கவனிப்பதற்காகவே ஏற்பட்டவை என்பதை அந்த ஸ்தாபனங்களின் தலைவர்களில் பலர் மறந்து தங்கள் சுய நன்மைக்காகவே தாங்கள் அந்த ஸ்தானத்தில் இருப்பதாகக் கருதி அதற்கேற்றபடி நடந்துகொள்கின்றனர். இதனால் அவர்களுக்குத் தங்கள் வாக்குகளைக் கொடுத்தனுப்பிய வாக்காளர்கள் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறாமல் ஏமாற்றமடைந்து அதன் பயனாகத் தேசிய விஷயங்களில் சிரத்தையற்றவர்களா யிருக்கின்றனர். சமீபத்தில் நமது நாட்டில் ஓட்டுரிமை சம்பந்தமாய் விசாரணை செய்த லோதியன் கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவரான மார்க்குவிஸ் ஆப் டபரின் என்பவர் இங்கிலாந்திலிருந்து வெளியாகும் 'ஸ்பெக்டேட்டர்' என்னும் பத்திரிகையில் 'லோதியன் கமிட்டியைச் சேர்ந்த நாங்கள் இந்தியாவில் விசாரணை செய்தபோது திடீரென்று ஒரு கிராமத்துக்குச் சென்று அங்குள்ள ஓட்டர்களைக் கண்டு, அவாகளுடைய ஓட்டுரிமை அப்படியே நிரந்தரமாய் இருக்கவேண்டுமா என்று கேட்டதற்கு, அதைப் பற்றி அவர்களுக்குக் கவலையில்லையென்றும், எவ்வகையில் தங்கள் ஓட்டுரிமையை உபயோகித்தாலும் அதனால் தங்களுக்கு எத்தகைய நலனும் ஏற்பட்டதில்லையென்றும் தெரிவித்தனர்,' என்று எழுதியிருக்கிறார். இதிலிருந்து நமது நாட்டு வாக்காளர்கள் ஜனப்பிரதிநிதிகளிடம் நம்பிக்கையற்றவர்களாய் இருக்கிறார்களென்பது நன்கு தெரிகிறதல்லவா? பொது ஜனங்களுக்குச் சௌகரியத்தையும் திருப்தியையும் தராத ஸ்தாபனங்கள் இருந்துமென்ன? இறந்துமென்ன? நிர்வாக ஊழல்களைக் காரணமாகக் கொண்டே சில முனிசிபல் சபைகளை அரசாங்கத்தார் கலைத்துவிட்டு ஒரு நிர்வாக அதிகாரியை நியமித்துவிடுவதும் சகஜமாய் இருக்கிறது. இது உண்மையிலேயே இந்தியர்களுக்கு அவமானத்தை அளிக்கவல்ல தென்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

ஜில்லாபோர்டு, தாலூகாபோர்டு, முனிசிபல் சபைகள் ஆகிய

வற்றின் தலைவர்களில் பலர், தாங்களே சர்வாதிகாரிகளென நினைத்துக்கொண்டு தங்கள் மனம்போனபடியெல்லாம் நிர்வாகம் செய்வது கண்டிக்கத்தக்கது. இதனால் பலர் துன்பத்திற்குள்ளாக நேர்கிறது. ஸ்தல ஸ்தாபனங்களின் ஆதிக்கத்திலுள்ள உத்தியோகஸ்தர்கள், சிப்பந்திகள் ஆகியோரின் உத்தியோகமே நிலையற்றதாயும் தலைவர்களின் யதேச்சாதிகாரத்துக்குள் அடங்கியதாயும் இருக்கிறது. அவர்கள் அப்போதைக்கப்போது அதிகாரம் வகிக்கும் தலைவர்கள், அங்கத்தினர்கள் ஆகியோருக்கு நல்ல பிள்ளைகளாக நடந்துகொள்ளவேண்டியிருக்கிறது. பொதுஜன நன்மைக்கும், சுயராஜ்யத்துக்கும் ஆஸ்திவாரமாகவுள்ள ஸ்தல ஸ்தாபனங்களில தலைமை வகிப்பதற்குச் சிறிதும் தகுதியற்றவர்கள் தங்கள் செல்வாக்கையும், செல்வத்தையும் துணையாகக்கொண்டு தலைவர்களாகிவிடுகின்றனர். அப்படிப்பட்டவர்கள் தங்கள் மானேஜர் போன்ற உத்தியோகஸ்தர்களின் இஷ்டப்படி நடக்கவேண்டியவர்களாகின்றனர் உத்தியோகஸ்தர்களும் தலைவர்களும் சேர்ந்துகொண்டு, தங்கள் ஆதிக்கத்திலுள்ள பாடசாலை ஆசிரியர் போன்றவர்களுக்கு இழைத்து வரும் கஷ்டங்கள் பல. எத்துணையோ ஆசிரியர்கள், வேறு விதியில்லையென்று இக் கஷ்டங்களையெல்லாம மிகப் பொறுமையுடன் சகித்து வருகின்றனர். லஞ்சம் கொடுக்கும் ஆசிரியர்களுக்கே பல சௌகரியங்களும் அளிக்கப்படுகின்றன. அவ்வாறு கொடுக்க இயலாதார் படுந் துன்பங்கள் அநேகம். அப்படிப்பட்டவர்களை அடிக்கடி தூரத்திலுள்ள பல இடங்களுக்கு மாற்றிவிடுகின்றனர். இதனால் அவர்கள் தங்கள் மனைவி மக்களுடனும், மூட்டை முடிச்சுகளுடனும் குறித்த காலத்துக்குள் அத்தூர இடங்களுக்குப் போய்ச் சேர அதிகம் கஷ்டப்படுகின்றனர். மற்றும் பல தலைவர்கள் சுயநலக்காரர்களாகவும், கூடா வொழுக்கமுடையவர்களாயும் இருக்கின்றனர். எல்லா வழிகளிலும் தங்கள் சுய காரியங்களைச் சாதித்துக்கொள்வதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருப்பார்கள். இதற்காக எத்தகைய இழிவான காரியங்களையும் செய்யப் பின்வாங்குவதில்லை. மாதர் முன்னேற்றத்தின் அவசியத்தை உணர்ந்து மாதர்கள் பலரும் கல்விகற்றுப் பல துறைகளிலும் புகுவதுபோலவே ஆசிரியைகளாகவும் பலர் முன்வருகின்றனர். அப்படிப்பட்டவர்களுக்குச் சகலவிதமான சௌகரியங்களையும் செய்துகொடுத்து உற்சாகமூட்டவேண்டியது இத்தகைய ஸ்தல ஸ்தாபனங்களின் கடமையாக இருந்தும், அவற்றின் தலைவர்கள் பலர், அம்மாதர்கள் விஷயத்தில் ஒழுங்கீனமாக நடந்துகொண்டு அப் பெண்மணிகளின் மனம் புண்படும்படி செய்வது பலமாகக் கண்டிக்கத்தக்கதாகும்.

ஸ்தல ஸ்தாபனங்களின் ஆதிக்கத்திலுள்ள பள்ளிக்கூடங்களில் உத்தியோக நியமன விஷயத்தில் பல ஊழல்கள் நிறைந்திருப்பது போலவே பாடப் புஸ்தகங்களைத் தேர்ந்தெடுப்பதிலும் கண்டிக்கத்

தக்க பல முறைகள் கையாளப்படுவது தேசத்தின் துரதிர்ஷ்டமே யாகும். பாடப் புஸ்தகங்களின் தகுதி, பொருத்தம் முதலியவை களைப்பற்றிக் கவனியாமல் பணமும் சிபார்சும் ஏறியதும் எத்தகைய ஆபாசக் களஞ்சியங்களையும் பாடப் புஸ்தகங்களாக வைத்துவிடுகின்றனர். இவைகளையெல்லாம் நோக்கும்போது, ஆசிரியர்களை நியமித்தல், பாட புஸ்தகங்களைத் தேர்ந்தெடுத்தல் முதலிய முக்கிய நிர்வாகங்கள் சர்க்கார் கல்வி இலாகாவைச் சேர்ந்தவர்களிடமே இருத்தல் நலமென்றும் தோன்றுகிறது. கண்ட்ராக்ட் முதலிய இதர விஷயங்களிலும் இவ்வாறே பல அக்கிரமங்கள் நடைபெறுகின்றன. ஸ்தல ஸ்தாபனங்களில் நடைபெறும் ஊழல்களை நாளுக்குநாள் பொது ஜனங்களும் அறிந்துவருவதால் அத்தகைய ஸ்தாபனங்களில் அவர்களுக்கு நம்பிக்கை குறைந்துவிடுகிறது.

தேசம் சுதந்தரத்தை யடைந்து ஜனநாயக ஆட்சி ஏற்படும் நிலைமையில் இருக்கும் இக்காலத்தில், ஜனங்களின் பிரதிநிதிகள் என்று சொல்லிக்கொள்பவர்கள், தங்கள் நிர்வாகத் திறமையின்மையையும், சுயநலத்தையும் வெளிப்படுத்துவது வருந்தத்தக்கதேயாகும். நாம் நம்மிடையேயுள்ள குறைகளை நிவர்த்தித்துக் கொண்டாலொழிய பெரிய பதவியைப் பெற விரும்புவதில் எத்தகைய பலனுமில்லை. ஸ்தல சுய ஆட்சி ஸ்தாபனங்களையே சரிவர நிர்வாகம் செய்ய முடியாதவர்கள் தேசத்தின் சுய ஆட்சியை விரும்புவது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவதுபோ லல்லவோ இருக்கும். ஆயினும் சட்டசபை நிர்வாக விஷயத்தில் உலகத்தையே பிரமிக்கச் செய்த வித்தல்பாய் படேல் போன்ற அரும்பெரும் தலைவர்களும், மிகச் சிறந்த அரசியல் நிபுணர்களும் நம் நாட்டில் தோன்றும்படியான பாக்கியத்தை நமக்கு இறைவன் அளித்திருக்கின்றான். ஆதலின் வாக்காளர்கள் தங்கள் உரிமையைத் துஷ்பிரயோகம் செய்யாமல் தகுதியுடையவர்களும் பொதுஜன சேவையில் ஆர்வமுடையவர்களுமான உண்மையாளர்களுக்கே தங்கள் வாக்குகளைக் கொடுத்துத் தேர்ந்தெடுத்தனுப்பினால் இத்தகைய ஊழல்கள் நடைபெறுவதற்கு இடமே யில்லாமற்போகும் என்பதில் ஐயமில்லை. இந்தியத்தாய் சுதந்தரம்பெற்று இன்பமுடன் வாழப்போகும் இச்சமயத்தில் வாக்காளர்களும், ஜனப்பிரதிநிதிகளும் தங்கள் பொறுப்பை யுணர்ந்து நடந்துகொண்டு உலகம் மெச்சும் வகையில் பொது நிர்வாகங்களை நடத்தக்கூடிய ஆற்றலையும், அறிவையும், தியாக புத்தியையும் அன்னாருக்கு அளித்தருள வேண்டுமென்று அனுதினமும் கருணையங்கடலாகிய எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றோம். வந்தேமாதரம்.

ஓம் தத் ஸத்.

---

# "ஆனந்தபோதினி"யின் 18–ம் ஆண்டு
# வாழ்த்துப்பாக்கள்.



(கருவேலி ப. வீரப்பதஞ்சை ராயர்)

அலைக டற்பல நண்ணியாங் கரும்புன லருந்தி
நிலவ ரைப்பினிற் பொழிதரு நீண்முகில் கடுப்பக்
கலைக ளிற்பயின் றவர்மனக் கருத்தொருங் கீட்டி
விலைக ணிப்பரி தாயெமக் களிசெயு மேகம்.
இனித்த பால்சருக் கரையிழு திவையொடு ணளைஇக்
கனித்த வன்பினிற் ருய்மக வருத்துறுங் கணக்கின்
மனித்த நல்லறங் கட்டுரை வரைபடம் விகடந்
தனித்த செய்யுளென் றிவைகளான் விளக்குறுந் தனித்தாய்.
தொடுத்த பல்கலைத் துறையினு மூதுக்குறை வெய்தி
யடுத்த மாந்தருக் கறமுத லுணர்த்தியு மவற்றை
விடுத்த மாதவர் வீடுறு விழுநெறி யிதுவென்
றெடுத்த கங்கையிற் கனியென விசைக்குமெய்க் குரவன்.
இயன்ற தன்னினம் பலவினு மீடுயர் வீலதாய்ப்
பயின்று கொள்ளுந ருதவுறுந் தவச்சிறு பயனின்
முயன்று நாடொறு மேனியிற் பணைத்தடன் முதிரா
வயின்ற வர்க்கெலா மானந்த மளித்தரு ளமுதம்.
இன்ன சீர்மைய ளானந்த போதினி யெனும் பேர்க்
கன்னி யெளவன மெய்திஞ ளவனிது காறுந்
துன்னு மேட்டிமை கருதுறி னினியவ டுலக்கம்
பன்ன லாகுமோ மன்னுக வவளிசை பரந்தே.



(ரா. மு. கிருஷ்ணபாரதி அம்பை)

அகிலாண்ட கோடியெலாம் அன்புடனே
    யாதரிக்கும் ஆண்டவன்றன்
புகலரிய பேரருளாற் புகழுடனே
    பதினேழு ஆண்டுதானும்
பகலவனைப் போலவுமே சாதிமத
    பேதமறச் சகத்தில்வாழும்
சகலர்க்கு மானந்த மேதந்த
    ஆனந்த! வாழ்க! வாழ்க!!

முத்தர்கர பாத்ரசிவப் பிரகாசர் முழுக்கருணை
முதிர்ச்சியாலே
இத்தலத்தில் மக்கள்மன இருளகற்றி
இனியபல பொருள்கள் காட்டி
நித்தமுநல் லறிவென்னும் ஒளிவீசுஞ்
சுடர்விளக்கே நிதியே நிற்குச்
சித்திதரு பதினெட்டாம் ஆண்டில் வளம்
திகழ்கவென வாழ்த்துவோமால். (2)

கனிவுடனே கீர்த்திபெறு கட்டுரைகள்
கட்டுபவர் கருணையாலும்,
பனிமலரைப் பழிக்குமிரு பாதமுள
பரந்தாமன் கருணையாலும்,
முனிசாமிப் பெரியார்தம் புகழ்மிக்க
போதினியே பன்னூறாண்டு
இனிதாக உனதுபுகழ் உலகமெலா(ம்)
ஓங்கிடவே வாழ்க மாதோ! (3)

(வரகூர் ச. சூரியநாராயணமூர்த்தி)

திங்களுங் கங்கையுஞ் செஞ்சடை யணிந்த
சங்கரன் நன்னருள் தங்கு மங்களம்
பொலிவுற்றோங்கிப் புகழ்திருமாது
மலிவுற்றொளிரும் மதராஸ் என்னும்
மாபெரும் பதியில் மருவிசீர் கொண்டு
பாபெரும் காவலர் பாவலர் முதலாய்
புகழ்ந்திடக் கல்விப் பொருள்பல வாய்ந்து
மகிழ்ந்திட யாரும் மாநில மிதனில்
பற்பல நவீனம் பண்புடன் பரப்பி
நற் பெயரெடுத்த நல்லானந்த போதினி
அவன்றன் பெயராம் அறைவது கேண்மின்!
புவனம் புகழும் மனிதன் முனிசுவாமி
இந் நிலமாந்தர் இனிதெனப் படிக்க
"ஆனந்தபோதினி" சுவைமிக வமைய
இனிக்குங் கட்டுரை இன்புறப் புகன்றனன்
பதினெட்டாய் புகழுறப் பரவினை
புத்தமு தனைய பொருட்டரு போதினி
ஆயு மிவ்வாண்டும் அறிவுறை யருளி
வாழி! வாழி! வளம்பல பெற்றே.

# ஒரு நிருபருக்கு விடை.

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

## திருக்குறளும் காமத்துப்பாலும்



ஒலகண்டா புரத்தினின்று திரு மு. வெ. கிருஷ்ணசாமி செட்டியார் என்னும் நண்பரொருவர் ஓர் நிருபம் வரைந்திருக்கின்றனர். அந்நிருபத்தில் நண்பர் பொய்யாமொழிப் புலவர் அருளிய திருக்குறள் என்னும் நூலில் உள்ள அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்த நான்கினையும் முப்பாலாகப் பிரித்துக் காட்டியுள்ளார். அதில் காமத்துப் பாலில் இன்பம் வீடு இரண்டும் அடங்கி யிருக்கிறது. ஆகையால் அச் செய்யுளை ஒட்டி இன்பம் வேருகவும் வீட்டை வேருகவும் பிரித்து "ஆனந்தன் வாயிலாக எம்போன்ருருக்கும் தெளிவாக எளிய நடையில் போதிக்கத் தங்களைச் சிரந்தாழ்ந்த வணக்கத்துடன் மன்ருடிக் கேட்டுக்கொள்கிறேன்" என்று எழுதி யிருக்கின்ருர்.

பொய்யாமொழிப் புலவராகிய நாயனுரவர்கள் காமத்துப்பாலில் இன்பம் வீடு இரண்டையும் அடக்கிப் பாடி யிருக்கின்ருரென்பது சரியல்ல. காமத்துப்பால் வெறும் காமத்துப்பாலாக மட்டுமே எழுதப்பட்டிருக்கின்ற தென்பதே ஆன்ரேர் அபிப்பிராயமாகும்.

வீடென்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவ தல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின் நூல்களால் கூறப்படுவன ஏனை மூன்றுமே யாம்" எனப் பரிமேலழகர் திருக்குறள் உரைப் பாயிரத்தில் கூறி யிருத்தலுங் காண்க. ஆகவே, வள்ளுவரும் துறவறவியலால் வீட்டைப்பற்றிக் கூறி யிருக்கின்றனர். நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்னு மதிகாரங்கள் அவற்றுள் முக்கியமானவை யாகும். ஆகவே, புருஷார்த்தங்கள் நான்கினையும் திருக்குறள் போதிக்கின்ற தென்பது ஒருதலை.

நானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆனு அறமுதலா வந்நான்கும். (நக்கீரர்)

* * * *

மேலும், காமத்துப்பால் சுத்த காமத்துப் பாலாகவே கூறப்பட்டுள்ள

தென்பதை, திருக்குறளை முழுது மாராய்ந்து அதன் தன்மையை விளக்கிய புலவர்கள்,

*　　*　　*　　*

இருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை. (சிறுமேதாவியார்)

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா விருபாலோ ராறாக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு. (மோசிகீரனார்)

என்று விளக்கியுள்ள செய்யுள்களைக் கொண்டும் இவ் வுண்மையை அறியலாம். அன்றியும்,

நான்கு புருஷார்த்தங்களையும் ஒரே பாட்டில் விளக்கப்போந்த ஔவைப் பிராட்டியாரும்,

"ஈதல் அறம் தீவினைவிட் டீட்டல் பொருள்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே இன்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

எனக் கூறி யிருத்தலும் காண்க. ஆகவே.

திருக்குறள் காமத்துப்பால் காமத்துப் பாலை மாத்திரம் உணர்த்துவதே யன்றி நண்பர் கூறுவதுபோல இன்பம் வீடு என்னும் இரண்டையும் அடக்கிக் கொண்டிருக்கவில்லை என்பதை நண்பருக்கு தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# பீஸ்! பீஸ்!! பீஸ்!!!

(சமய சஞ்சீவி.)

(தொகுதி-17, பகுதி-12, 896-ம் பக்கத் தொடர்ச்சி)

இத்தகைய பிச்சைக்காரர்களைக் குறித்து இதுகாறும் யாரும் கவனம் செலுத்திப் பரிசீலனை செய்யாமை வருந்தத் தக்கது. போனது போகட்டும். இந்தப் பிச்சைக்காரர்களின் ஆதாய வருமானங்களைக் கணக்கெடுக்க உடனே அரசாங்கத்தார் ஏற்பாடு செய்ய வேண்டும். இந்த வேலையில் ஊதியம் பெறாத ஆசாமிகள் தலையிட்டுக் காரியம் நடத்தல் மிகவும் கஷ்டமானபடியால் அரசாங்கத்தார் ஒரு கமிஷனை ஏற்பாடு செய்தால் நன்றாயிருக்கும். அந்தக் கமிஷனில் இங்கிலாந்து—வெள்ளைத் துரைமார் பத்துப் பேர்—இந்தியர்களில் ஒரு பிராமணர், ஐந்து பிராமணரல்லாதார், ஒரு முஸ்லிம், ஒரு கிறிஸ்தவர், ஒரு பெண்மணி—ஆகிய இவர்கள் இருந்தால் பொருத்தமாயிருக்கும் என்பது என் அபிப்பிராயம். இந்தக் கமிஷன் தலைவராக ஒரு சீமைத் துரையை நியமிக்கலாம். இந்தக் காரியத்திற்காக நான்கு லக்ஷம் ரூபாய் பட்ஜட்டில் அரசாங்கத்தார் சாங்ஷன் செய்து விடுவார்கள் என்று நம்புகின்றேன். இந்தக் கமிஷனுக்கு அரசாங்கத்தார் சகல சௌகரியங்களையும் செய்து கொடுக்க வேண்டும். பொது ஜனங்களும் இக் கமிஷனுக்கு வேண்டிய உதவிபுரிய வேண்டும். ரயில்வே கம்பெனியார் இக் கமிஷனர்க்குத் தனி வண்டிகளும் தனிச் சௌகரியங்களும் செய்து கொடுக்க வேண்டும். இந்தக் கமிஷனர் இமயம் முதல் குமரிவரை சுற்றுப்பிரயாணம் செய்து எல்லாப் பிச்சைக்காரர்களிடமிருந்தும் சாக்ஷியம் வாங்குவார்கள். பின்னர் இவர்கள் ஒன்றுகூடி யோசித்து ஒரு அறிக்கையை வெளியிடுவார்கள். அவ்வறிக்கையில் முக்கியமாய்ப் பிச்சைக்காரர்களின் வருவாய் வகைகள், ஜாதிப் பாகுபாடுகள், வித்தை சாமர்த்தியங்கள், நோய்கள், இருப்பிடங்கள் முதலிய விஷயங்கள் குறிப்பிடப்படும்.

பிறகு அரசாங்கத்தார் இந்த அம்சங்களை யெல்லாம் நன்கு ஆராய்ந்து பிச்சைக்காரர்கட்கு வரி விதிக்க வேண்டியிருக்கிறது. இதில் அரசாங்கத்தாருக்குக் கொஞ்சம் சிரமம் உண்டு. அதாவது பிராமணர்—பிராமணரல்லாதார், இந்து—முஸ்லிம், தாழ்த்தப்பட்டவர்கள் முதலிய விவகாரங்களைக் கவனிக்க வேண்டி யிருக்கிறது. இந்த விவகாரங்களை மனதில் வைத்துக் கொண்டு பிராமணர்கட்கு அதிகமாகவும், பிராமணரல்லாதாருக்குக் குறைவாகவும் தாழ்த்தப்பட்ட மக்கட்கு அதிலும் குறைவாகவும் வரி விதிக்கவேண்டியிருக்கிறது. இந்துச் சந்நியாசிகட்கும், முஸ்லிம் பக்கிரிகட்கும் மனஸ்தாபம் நேராமலிருக்க ஒரு கமிட்டியை ஏற்பாடு செய்து, அக் கமிட்டி நிர்ணயப்படி அவர்கட்கு வரி விதித்தால் நன்றாயிருக்கும். இங்ஙனம் பிச்சைக்காரர்கட்கு வரி விதிப்பதால், தவறாமல் மிகுந்த திரவியம் திரட்டலாம். அந்த வருவாயைக் கொண்டு அரசாங்கத்தார்—ராணுவத்தில் சிக்கனக் கத்தியை நீட்டாமல் இன்னும் அதிகப்படியான ஊதியங்கூடக் கொடுக்கலாம். இல்லையேல், பிச்

சைக்காரர்களின்மீது அதிகாரம் செலுத்த ஒரு வெள்ளைத் துரையை கமிஷன ராக நியமிக்கலாம். அந்தத் துரைக்குக் கீழ் இரண்டு மூன்று கருப்பு மனிதர்களைக் குமாஸ்தாக்களாகவுங்கூட நியமிக்கலாம்.

மேலே எடுத்துக் காட்டியபடி பெரிய மடாதிபதிகள் முதல் சாதாரணப் பிச்சைக்காரர் வரை—எல்லாருக்கும் வரி விதிப்பதா யிருந்தால் அரசாங்கப் பொருள் நிலை வளர்ந்து நமது நாடு மிகுந்த வைபவத்துடன் விளங்கும் என்று நம்புகின்றேன். இதனால் உலக க்ஷேமமுங்கூட உண்டாகும்.

3. இன்னொரு யோசனை கூறிவிட்டு இத்துடன் நிறுத்திக் கொள்ளுகின்றேன்.

பத்திரிகைகளை நடத்தும் நோக்கம் என்ன?—சந்தாதாரர்களின் தொகையைப் பெருக்கி அதன்மூலம் பணம் சம்பாதிப்பதற்கல்லவா? அரசாங்கத்தாருங்கூடச் சில பத்திரிகைகளை நடத்துகிறார்கள். ஆனால் அவர்கள் சந்தாதாரர்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொள்ளுவதில்லை. ஜில்லா கெஜட்கள்—மாகாண கெஜட்கள்—இவை அரசாங்கத்தாரின் பத்திரிகைகள். இவைகளைச் சில உத்தியோகஸ்தர்கள் மாத்திரம் படிக்கிறார்களே யொழிய எல்லாரும் படிப்பதில்லை. உண்மையை நோக்கும்போது இவை எல்லாரும் படிக்க வேண்டிய பத்திரிகைகளே. இவைகளை எல்லாரும் படிக்குமாறு செய்ய—மற்றப் பத்திரிகைகளைப் போல் இவைகளும் ஜனங்களின் கவனங்களை ஆகர்ஷிப்பதற்கு வழி காண வேண்டும். அதற்காக ஒவ்வொரு வெளியீட்டிலும், படங்கள், சிறு கதைகள், நாடகங்கள், விகடங்கள் முதலியவைகளைப் பிரசுரம் செய்தல் மிக மிக லாபகரமான விஷயம். இதற்காக அரசாங்கத்தார் தனியாக நிருபர்களையும் ஆசிரியர்களையும் கட்டுரையாளர்களையும் நியமிக்க வேண்டியது அநாவசியம். சர்க்கார் உத்தியோகங்களில் கைந்நிறைய வேலையில்லாமல்—எல்லா இலாகாக்களிலும் உத்தியோகஸ்தர்கள் நிறைந்திருக்கிறார்கள். இவர்கள் எல்லாரையும் கட்டுரை முதலியவைகளை எழுதச் சொன்னால் தவறாமல் எழுதுவார்கள். இதனால் பத்திரிகைகள் நன்றாயிருக்கும். மக்கள் மனங்களையும் கவரும். சந்தாதாரர்களின் தொகையும் பெருகும். வருவாயும் ஏராளமாக வரும். எளிதில் மக்களை மகிழ்ச்சிக் கடலில் மூழ்கச் செய்து வருவாய்க்கு வகையாகும். இவ்வழியைத் தவறாமல் அதிகாரிகள் கைக்கொள்ள வேண்டும் என்பது எனது விண்ணப்பம்.

மக்கள் பணம் திரட்டுவதற்குப் பீஸ் வசூல் செய்யும் அநேக சந்தர்ப்பங்களை எடுத்துக் காட்டியிருக்கிறேன். அரசாங்கத்தாருக்கும்-இந்நெருக்கடியான காலத்தில் நல்ல யோசனை கூறிவிட்டேன். இவை தவிர யார் யாருக்கு எந்த எந்த வழி தோன்றுகிறதோ அந்த அந்த வழிகளிலெல்லாம் பீஸ் வசூல் செய்து கொள்ளலாம். மக்கட்கு இவ்வுரிமை வழங்க சட்டசபையில் ஒரு மசோதாவை—யாராவது கொண்டுவந்து நிறைவேற்றினால் பெரிய உபகாரம் செய்தவராவார்.

இத்தகைய அபூர்வமான கட்டுரை எழுதி லோகோபகாரமாக வெளியிட்ட எனக்கு மக்கள் எவ்வளவு பீஸ் கொடுக்கவேண்டி யிருக்குமோ?



# கற்பின் பொற்பு

———:(o):———

## (தெல்லிப்பழை—கா. சின்னப்பா)

### அகவல்

எவ்வகைப் பொற்பினும் எழிலால் மிக்கது
ஒளவையைப் போன்ற அரிவையர் கற்பென்
றெவ்வூர் மாந்தரும் எக்கா லத்தும்
செவ்வையா யுரைப்ப தைத் தேரா தவர்யார்?
கற்பின் சிறப்பைக் கன்னியர் பூண்பது
பற்பல பூஷணம் பாவிப் பதினும்
பொற்பை யளித்துப் போற்றுதற் குரியதென்
றற்ப ரல்லா ரனைவரு மறிவர்.
தேக அழகும் செல்வப் பெருக்கும்
பாகசாஸ் திரமுதற் பற்பல கலைகள்
கற்றுத் தேறிய கண்ணியத் தோடு
சுற்றத் தவர்கள் சொல்லி மகிழ்ந்திடும்
சாதியின் தகைமையும் சகோதர வலிமையும்
ஆதிய அனேக அரியலட் சணங்கள்
பொருந்திய நற்குணப் பூவைய ராயினும்
அருந்ததிக் கனியாய் அுறைந்திடு மரிய
கற்பினைப் பூணுக் கன்னிய ரெந்தப்
பொற்பினைப் பொருந்தினும் புகழ்தனைப் பெறுதல்
இல்லையென் பதனை எப்படிப் பட்ட
புல்லரு முணருதல் புகலவும் வேண்டுமோ?
நாண்மடம் அச்சம் நவின்றிடு பயிர்ப்பு
பூண்பவ ளன்றியெப் பூவையு முலகினர்
போற்றத் தக்க பொற்பினை யுடையளாய்
நாற்றிசைக் கண்ணும் நலவிசை நாட்டாள்.
கற்பிலா அழகியின் பொற்பைப் புகழ்பவர்
அற்ப ரன்றிமற் றறிவுளோ ரல்லர்.
அழகிற் குறைந்த அரிவை யராயினும்
கிழப்பரு வத்தைக் கிட்டி யிருப்பினும்
நகைபல அணியா நங்கைய ராயினும்
தொகைமிகு சீதனம் சொலற்கரு கலைகள்
சாதியி லுயர்வெனச் சாற்றிடும் பெருமை
ஆதிய இவையெலாம் அற்றவ ளாயினும்
கற்பினைப் பூண்ட கன்னிய ராயின்
பற்பல லட்சணம் படைத்தவள் போல்வள்.
தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகுமெனச்
சாற்றி யிருப்பது சரியோ பிழையோ?

சாவித் திரியும் சந்திர வதியும்
தேவிநற் சீதையும் சிறப்பினை யடைந்தது
கற்பி ளுலன்றியெக் காரணத் தாலென்
றற்பரைக் கேட்பினும் அவர்க்கது தெரியும்
விவாகம் செய்ய விரும்பும் வாலிபன்
அவாவிடும் நற்குணம் அனைத்தினும் பார்க்கக்
கற்பு நிறைந்தநற் காதலி தன்னைப்
பொற்பெனும் பூஷணம் பொருந்தா ளாயினும்
ஆதனம் நகைமிக அற்பமா யுள்ள
மாதா யிருப்பினும் மனஞ் சோராது
தேடி மணந்திடின் தெரிவையின் கற்பினுல்
நாடிடும் அவனை நன்மைக ளனேகம்,
இதையறிந் தன்றே எம்முன் ஞேர்கள்
கதைகளிற் கூடக் கற்பின் பொற்பைப்
பலவகை யாயும் பகர்ந்திருக் கின்றனர்
சிலரிதை யறியா தலேகின் றனரே
கற்பிலா மங்கையைக் கண்களா லறியலாம்
சொற்களா லறியலாம் தோகையின் நடையுடை
பாவனை முதலிய பலவகை யாலும்
நாவினுல் நவிலரும் தீவினை நிறைந்த
பெண்களை யாரும் பிழையிலா தறியலாம்.
ஆதலா லரிவையர் அனைவரும் கற்பின்
மீதினி லார்வமாய் வீரத் தோடுதம்
சீவியம் முழுவதும் திகழ்ந்து விளங்கி
நாவினுல் நவிலரு நற்குணத் தோடு
பாவலர் போற்றும் பதிவிர தைகள்பால்
மேவிடு லட்சணம் மேன்மையாய்ப் பெற்று
அல்லும் பகலும் அரனடி தொழுது
எல்லேயி லின்பம் எய்தி வாழ்ந்து
கற்புக் கரசியர் கணவரைக் கனவிலும்
தற்பர னென்று சந்தத மெண்ணித்
தமக்கும் பிறர்க்கும் தக்ககண் ணியத்தை
இமைக்கணந் தவரு தென்றும் பெறல்போல்
புகழுடன் புண்ணியம் பொருந்திய சீவியம்
அகமதி லின்புற அனுதின மடையலாம்
தையல்கா யகமெனச் சற்சனர் சாற்றிடும்
செய்யநன் ஞமம் சீருடன் சேர்ந்திடும்
என்பதை அறிந்து இன்புட னிருந்து
மன்பதை போற்றிட வாழ்ந்திட லாமே.

---

வாத்தியார்:—"அடே ராமா! அதென்ன வாயில்? அதைக் கொண்டு வந்து கொடு என்னிடத்தில்!"

மாணவன்:—"பல் நோய் சார்! அதை உங்களிடம் கொடுப்பதற்கில்லை சார்!"




# பிராட்டியார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

(தொகுதி 17. பகுதி 12. 924-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி பிராட்டியாரும் தாசரதியும் ஊழின் வலியால் தற்செயலாக ஒருவரை ஒருவர் காண நேர்ந்தமையும், அங்ஙனம் நேர்ந்த கணத்திலேயே இருவர்களின் உள்ளுணர்ச்சியும் ஒத்த வேகத்தில் எழுந்து, தகைய முடியாதபடி கண்களின் வழி கருத்திற்றாக்கி ஆண்மையின் திண்மையையும் பெண்மையின் பெருமையையும் விழுங்கி நிமிர்ந்த தென்பதாகவே கவி கூறுகின்றார்.

பெண்களின் நோக்கம் முதற்கண் தோள்களில் சென்றுபடியும் (நாணம் தலைநிற்பதாகிய) குறிப்பையும், ஆடவரின் நோக்கம் கூசுதலின்றிக் குறிக்கொள்ளும் இயல்பினையும்கூட எடுத்துக்காட்டத் தவறினாரில்லை.

> "பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்
> தொருவரை யொருவர் தம்முள்ளம் ஈர்த்தலால்
> வரிசிலை அண்ணலும் வாட்கணங்கையும்
> இருவரு மாறிப்புக்கிதைய மெய்தினார்"

ஒத்த குலனும், ஒத்த நலனும், ஒத்த இளமையும் உடைய இருவர் தனிமையில் விதி வலியால் எதிர்ப்பட்டு சமமான அன்பில் ஈடுபடுவரேல் பழைய நிலை மாறிப் புதிய மாறுதலை யடைகின்றனர். அந்த மாறுதலே ஈண்டு தம்மை மறந்து ஒருவர் உள்ளத்தில் மற்றொருவரின் ஓவியம் காட்சி யளிக்கத் தொடங்குவதாகும்.

என்னே! எதிர்ப்பட்ட ஞான்றே இறங்கு துறையில் நீச்சாயினமை போல இத்துணை தீவிர எண்ணம் எழுவதும் சால்புடைத்தோ? எனும் சங்கை நிகழ்வதியல்பு. அதற்குச் சமாதானமாகக் கவி,

> "கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்
> பிரிந்தவர் கூடிடிற் பேசல் வேண்டுமோ?"

என இவ் விருவர்களின் பழமைத் தொடர்பை நினைவூட்டுகிறார். பழைய

கேண்மையாளர் தொடர்பே இத்தகைய சலனமற்ற விழுமிய நிலைமையை விரைந்தடைதல் கூடுமென்பது குறிப்பு.

தனக்கென இதுகாறும் தன்பா லமைந்து கிடந்த எண்ணங்கள் அனைத்தும் புதிதாய்க் குடிபுகுந்த வேட்கை யுணர்ச்சி காரணமாக மறையலாயின. கன்னிகை யாதலின் செயத்தக்க திதுவென அறியாராய் எண்ணமிழந்து செயலிழந்து உயிரில்லாத சித்திரத்திற் றீட்டப்பெற்ற பதுமை போலாயினர் பிராட்டியார்.

இவர்தம் சிந்தையும், கற்பும், அவயவப் பொலிவும் இராமனைப் பின் தொடர்ந்தன. இவைகள் தன்னைத் தொடர இளவலாகிய இராமன் விசுவாமித்திரர் பின்பு நடந்து சென்று மறைந்தனர் என்றருளிய கவி இராமனும் முனிவ ருள்ளம் ஐயுறுதபடி எண்ணத்திற் கடிமைப்பட்டுத் தயங்கி நில்லாமல் சென்றனர் என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றார். அவ்வாறே பிராட்டியாரின் கண்வழி புகுந்து கருத்திடங்கொண்ட காதனோய் பாலுறுபிரையெனப் பரந்த தென்று மிகப் பொருத்தமாக அந்நோயின் இயற்கையை வெளியிடுகின்றார். அவ்வாறு பாலில் இட்ட பிரைபோற் பரந்துநின்றதெனினும்,

"நோமுறு நோய் நிலைநுவ லகிற்றிலள்
ஊமரின் மனத்திடை யுன்னி விம்முவாள்"

என உண்மைப் பெண்மையின் ஆற்றுந் திறமையையும் குறிப்பிடுகின்றார்.

இத்தகைய நிலையிலும் தன் எண்ணம் முறைகடந்து விட்டதோ? எனும் அச்சமும் தோன்றுகிறது. அதனைத் தெளிவாக்கக்கூடிய சின்னங்களாகிய

"வரிசிலைத் தடக்கையன் மார்பி னூலினன்
அரசிளங் குமரனே யாகல் வேண்டுமால்"

என்று கைப்பிடி வில்லையும் முப்புரி நூலினையும் கண்ட காட்சியை நினைந்து சாந்தி யடைகின்றார். உத்தமப் பெண்மணிகள் எப்போதும் பழைமை பாராட்டும் பண்புடையவர் என்பது இதனாற் பெறப்படுகின்றது. இனி கவி மரபுப்படி படிப்படியாக நோயின் வளர்ச்சி அதனா லெய்தும் வேறுபாடுகள் முதலிய தன்மைகளை வெகுவாக விரிக்கின்றார். மறுநாள் அரசவையில் ஜனக மகாராஜன் விசுவாமித்திர முனிவருடன் வீற்றிருந்த அரச குமாரர்களாகிய இராம லட்சுமணர்களைக் கண்ணுற்றதும், அவர்களை இன்னாரென்றுணர்த்தக் கேட்டதும், குல குருவாகிய சதாநந்தர் முகத்தால் சிவ தநுவை முறிக்கவேண்டிய அவசியத்தினை விளக்கியதும், அவ்வாறே தநுவினை லேசாக முறித்ததும் கதையின் தொடர்புகளாம்.

அவ்வாறு அரசவையில் புதிதாகவந்த அழகிய அரசிளங் குமரன் ஒருவனால் வில் முறிந்தது என்னும் மகிழ்ச்சிக்குரிய செய்தியைப் பிராட்டியாரின் தாதிகளில் ஒருத்தி ஓடிச்சென்று தன் தலைவியிடம் கூறுகின்றாள். ஞானவானாகிய ஜனக மகாராஜரே என்றும் இனி மணமும் இலை என நிராசையுடனிருந்த நிலைமையில் வில் முறிபட்டது எனக் கூறியதனால் கரைகடந்த களிப்பெய்தவேண்டிய திருக்க, பிராட்டியார் தாதி கூறிய குறிப்பில்

"கோமுனியுடன் வரு கொண்டல் என்றபின்
தாமரைக் கண்ணினன் என்ற தன்மையால்
ஆம் அவனேகொல் என்றையம் நீங்கினள்"

என்றும்,

"இளைய கோவொடும், பராவரு முனியொடும் பதிவந் தெய்தினன்"

என்பனவாதி அடையாளங்களையும் எண்ணித் தனக்குள்ளாகவே,

"சொல்லிய குறியின் அத் தோன்றலே அவன்
அல்லனேல் இறப்ப லென்றகத்துள் உன்னினள்"

என்றும் பிராட்டியாரின் சுயநிர்ணயத்தை வலியுறுத்துகின்றார்.

தந்தையால் நிறுவப்பட்ட வில் ஒருவனால் முறிக்கப்பட்ட தாயினும், அவ்வொருவன் தன் மனதில் இடம்பெற்ற அரச குமாரனாக இருந்தால் மணம் புணர்வது—வேறு பிறனாயின் இறப்பது என்னும் முடிவுக்கு வந்தனர் என்று தெரிகிறது. காதலுக்காக மணப்பதென்னும் கருத்தே ஈண்டு மலர்ந்து மணம் வீசுகின்றது. மணமும் வாழ்வும் அறிவுடைய இருபாலார்களிலும் ஓர் கட்டாயச் சடங்காக அன்றன்று ஏற்கப்படவில்லை என்பதும் தெளிவு.

முன்னோர் ஒழுக்கத்திற் கடங்கி, நேர்மையான வழியில் ஏற்பட்ட உணர்ச்சியைப் பின்பற்றுவதே மணமெனப் படுகிறது. யௌவனம், இன்பம், இவ்விரண்டினைமட்டில் கருதி இயற்கை விதிகளை மதியாது கொள்ளும் உடன்பாடு மண மாகாமல் நாற்றமாகவே பெரும்பாலு முடிவதென்பது இந் தியப் பெரியார் கொள்கை. தலைகீழும் கால்மேலுமாக நடப்பதே சிறந்த நாகரிக மென்னும் உணர்ச்சி மிக மிக வேகமாய் வளர்ந்து வரும் இந்நூற் றாண்டிலும் அப்பழைய கொள்கையாளர்களின் தொகை சுருங்கவில்லை. நிற்க பிராட்டியார் தந்தையார் பிரதிக்ஞையின்படி வில்லை முறித்தவருக்குத் தன்னை யளித்தாலும், தன் மனம் இச்சித்த இளைஞனைவிட்டுப் பிறனுக்கு மாலை யிடுவ தில்லை—மடிவது என்று மனதை உறுதிப்படுத்தினாரே யொழியத் தடை மீறித் தன்னால் காதலித்த ஒருவனை மணப்பேன் என்று சங்கற்பித்தாரில்லை. வேறொருவன் வில்லை முறித்திருப்பின் தந்தைக்கும் பெண்மைக்கும் பழி விளைய என் மனதுக்கினிய நாயகனை காந்தர்வமாக வரிக்கின்றேன் என்று கருதினாரில்லை.

இதுவே மதியிற் சிறந்த மாதர் இயல்பு. திரௌபதா தேவியும்,

"பூண்டெரி மார்பன் இன்றிப் பொன்னவை பொலியத்தோன்றி
ஈண்டெரிமுன்னர் மன்னர் இழிவுற வேட்டிலானேல்
மீண்டெரிபுகுவன் என்னும் எண்ணமே விளையும் நீராள்"

என்று இறக்கக் கருதியதாகக் கவி கூறியுள்ளார். இரகசியக்கூட்டம் என்னும் காந்தர்வத்தை விரும்பாமல் அக்கினி சாட்சியாக ஒழுக்கப்படி மணம் புரிதல்வேண்டு மெனவும் வற்புறுத்துகின்றார். இவைகளினாலெல்லாம் தங்கள் வாழ்க்கைக்கு நேர்மையான முறைகளைத் தாங்களே நிர்ணயிக்கும் வயதை அடைந்திருந்தார்கள் என்பதில் ஐயமில்லை. கிடைக்கக்கூடிய உதாரணங்க ளெல்லாம் அரசகுல மடந்தையர்க ளிடையில்தான் என்பதும் விளக்கமே.

ஆடவர்கள் 16-வயதில் பெறக்கூடிய இயற்கை யுணர்ச்சியின் வளர்ச்சி யளவினைப் பெண்கள் 12-வயதிலேயே நிரம்பப் பெறுகின்றனர். எத்துணை மந்தமதியினராயினும் பதினுன்கு வயதிற்குள் நிரம்பாது பெண் அறிவிருப்பதில்லை. அதற்குள் ஏற்படும் உலக அறிவு 60-வயதிலும் வளரக்கூடியதில்லை. ஏற்படும் அநுபவங்களினுல் அவ்வியற்கை செம்மைப்படவும் உரம்பெறவும் இடமுண்டாகின்றது. ஆதியில் குழந்தை மணம் இருந்ததாகவும் எண்ண முடியாது. பாரதநாடு பின்னர் காம துரந்தரர்களாய் அறிவிழந்து யதேச்சாதிகாரம் புரிந்த சில துன்மதி யரசர்களின் ஆதிக்கத் துட்பட்டதிலிருந்தே இச் சிசு மணம் தோன்றியிருக்கவேண்டும் என ஊகிக்கவேண்டியிருக்கிறது. தர்ம ராஜ்யம் எனப் புகழ்பெற்ற மலையாள நாட்டில் உயர் வகுப்பினரிலேயே என்றும் குழந்தை மணம் அநுஷ்டானத்தில் இருந்ததில்லை என்பதே போதிய சான்ருகும். விவாக விஷயங்களில் பெற்ருேர் பெரியோர் தலையீடு வெறுக்கத்தக்கதென்றும், அவரவர்கள் சுயநிர்ணயமே இன்பமளிக்குமென்றும் சிலர் கருதுகின்றனர். சுயமாகக் காதலித்துக் கூடிய சகுந்தலையின் வாழ்வு பின்னர் யாதாயிற்றென்பதைச் சிறிது நினைவு கூர்வோமாகில் மனித முயற்சி மட்டில் தெய்வாநுகூலமின்றிப் பலன் தரமுடியாதென்பது தெற்றென விளங்கும். பெரியோர் தலையீட்டினுல் உள்ள நன்மையும் போற்றப்படும். இதனுல் தெய்வாநுகூலத்தை நம்பி மனிதன் தனது கடமையில் பிறழலாம் என்பது மடமையாகும்.

அறிஞர்கள் தலைவணுகிய மிதுலாபுரி மன்னன் தன்பால் வளர்ந்து வரும் வனிதாரத்தினம் தாமரை மலரில் வாழும் இலக்குமியே யென உணராதவரல்லர். எனினும் மனிதன் அதிலும் மனிதரையாளுமன்னவன் தனக்குரிய தந்தையின் கடமையைப் புறக்கணிக்கக் கூடாதென்றே பற்பல இன்னல்களை ஏற்றிருந்தனர் என்பது தெளிவு. இனி இவண் இராமன் தநுவினை முறித்ததனுல் பிராட்டியாரின் திருமணம் ஜனகர் மனதில் உறுதிப்பட்டது. தானிது காறும் போற்றி வந்த நிபந்தனைப்படித் தனது திருமகளை இராமனுக்கு மணம் புரிவிக்கக்கருதி விசுவாமித்திரர் அனுமதிப்படி தசரத சக்கிரவர்த்திக்குத் திருமுகம் விடுத்தனர். அரசர்க்கரசனும் அளவு கடந்த மகிழ்வுடன் நகர மாந்தர்கள் புடைசூழப் பரிவாரங்களுடன் மிதுலை யடைகின்ருர். அவ்வாறு போந்த சக்கரவர்த்தியாரும் அவரை யுள்ளிட்டாரும் கண்டுகளிக்குமாறு அரசவையில் ஜனகர் மங்கல தெய்வமாகிய ஜாநகியை வரச் செய்கின்ருர். இதற்குக் கோலங் காண்படலம் எனப் பெயர் அளிக்கப்பட்டிருக்கிறது. அதாவது மணமகளை மணமகன் வீட்டில் மணத்திற்கு முன் காண்பதென்னும் ஓர் முறைமையே யாகும்.

இவ்விடத்தில் தான் பிராட்டியார் தம்மனதில் ஏற்பட்ட சந்தேகம் நீங்கித் தாம் கண்ணுற்ற ஆடவர் திலகனே வில்முறித்த வீரன் என்று திடப்படுகின்றனர். இதனைக் கவியரசர்

எய்யவில் வளைத்ததும் இறுத்தது முரைத்தும்
மெய்வினை விடத்துமுதலையம் விடலுற்ருள்
அய்யனை யகத்து வடிவேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்.

என்ற செய்யுளால் விளக்குகின்ருர். பெண்கள் நாணத்தால் கைவளை திருத்

தும் வியாஜத்தினுற் காண்பதும் காலினல் மண் கிளைத்து நிற்றலும் இயற்கைக்குண மாதலின் அதனையும் சுட்டுகின்றார்.

செயலருஞ் செய்கை செய்த இரவிகுல திலகனும் தனது இப்பெரிய வெற்றிக்காக அளிக்கப்படும் பெண்ணரசி தான் கன்னிமாடத்தில் கண்ட மங்கைதானே? அல்லவோ? எனத் தம்முள் நோய் செய்திருந்த ஐயம் நீங்கப் பெற்றனர் என்பதை

"அன்னவளை அல்லள் என ஆமென அயிர்ப்பான்
கன்னியமிழ் தத்தையெதிர் கண்டகடல் வண்ணன்
உன்னுயிர் நிலைப்பதோர் அருத்தி யொடுழைத்தாண்
டின்னமிழ் தெழக்களி கொளிந்திரனை யொத்தான்."

என்னும் கவியால் விவரித்துள்ளார்.

வருந்தி முயன்று அதமும் பெற்ற இந்திரனைப் போன்று மகிழ்ந்தான் இராமன் என்ற கவி ஐயம் நீங்கப்பெற்ற பிராட்டியார் அவ்வமிழ்தத்தை முழுதும் உண்டவளைப் போன்றாள் என்று வெகு விநயமாக,

"அருங்கலன் அணங்கரசி ஆரமிழ் தனைத்தும்
ஒருங்குடனருந்தினரை யொத்துடல் தடித்தாள்"

எனக் கூறியுள்ளார். துன்பம் எய்துங்கால் அதனை மிக மிகப் பெருக்கி வருந்துவதும் இன்பமுறின் மீறிய மகிழ்ச்சியுற்றுத் தம்மையே மறப்பதும் பெண்கள் இயல்பாதலின் அவ்வியற்கைக் கேற்ப இருவகை யுணர்ச்சிகளையும் கவி சீதைபாற் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றார். இங்குதான் உண்மையான விவாக நிர்ணயம் வதூவரர்களுக்குள் நிலைபேறுயிற்று.

குலகுருவாகிய வசிஷ்டமுனிவரர் இராமன் விஷ்ணுவின் அவதாரமென்பதை யுணர்ந்தவராதலால், அத்திருமாலுக்குரிய "அல்லிமலர் புல்லும் மங்கை யிவளாமென வசிட்டன் மகிழ்வுற்றான்" என்று கூறுகின்றார். தசரதரோ பிராட்டியாரின் வடிவழகினைக்கண்டு திகைத்து இந்நாள்காறும் நாம் அடைந்திருந்தது எந்தத் தெய்வத்தின் கடாக்ஷமோ? அந்த கடாக்ஷத்திற்குரிய பிம்பமே இதுவாகும் என்றே என்பாலில் இலக்குமி எய்தினள் என்று புளகாங்கிதரானார் என்று கூறுகின்றனர்.

ஏனையோர் இவ்வொளி வடிவினைக்கண்டதும் கடவுளைக் கண்டவுடன் கைகூப்பும் வழக்கில் அரசகுமாரி யென்கிற எண்ண மறைந்து கரங்குவித்துக் கண்களில் ஆநந்தம் அரும்பச் சித்திரம்போல் அசைவற்று பரவசமாயினர் என்பது மிகவும் ஊன்றி இன்புறத் தக்கதாம். பிராட்டியார் மறுதினம் மணம்புரி மண்டபத்தெய்திய காலையில் விளங்கிய சோபையைக்கண்டு வானவரும் அலைகடற் பிறந்த திருமகள் தாமரைக்கண்ணனை முதலில் மணந்த காலத்தி லிருந்ததைவிட இன்றே அதிக அழகுடன் விளங்குவதாக மதித்து மகிழ்ந்தனர். என்னே பேரழகின் எல்லையைப் பேசலாகுமோ? காணுந்தோறும் புதுமைக் காட்சியின்பம் வழங்குதல் அவ்வழகிற் கியற்கை யன்றோ? கூறிக் கூறிச் சலித்த கவிவேந்தர்

"ஒலிகடல் உலகினில் உம்பர் நாகரில்
பொலிவது மற்றிவள் பொற் பென்றாலிவள்

மலிதரு மணம்படு திருவை வாயினுல்
மெலிதரு முணர்வினேன் விளம்பு கேனரோ"

எனக் கூறிப் பிராட்டியார் பேரழகிஞேடு புதிதாகக்கூடிய திருமணக் கோலத் தினைத் திறம்படக் கூற முடியவில்லையே யென வருந்தும் நிலைமையை ஒரு வாறு எடுத்துக் காட்டுகிருர்.

பூவுலகிலும் தேவுலகிலும் நாகர் உலகு முதலிய எல்லா வுலகிலும் பொலி யும் பொலி வெல்லாம் பிராட்டியாரின் ஒரு பாக மென்ருல் அத்தனைக்கும் இருப்பிடமாகிய இப்பூர்ணப் பொலிவினை மெலிந்த வுணர்வுகொண்டு வாயி ஞல் விளம்ப முடியாதெனக் கவியரசர் பின் வாங்கிஞரெனில் வேறு சிறப்பும் வேண்டுவதோ ?

"கோமகன் முன்சனகன் குளிர் நன்னீர்
பூமகளும் பொருளும் மென நீ என்
மாமகடன் ஞெடு மன்னுதி யென்ஞத்
தாமரை யன்ன தடக்கையி னீந்தான்"

என்ற கவியிஞல் இராமன் ஸ்ரீதேவி பூதேவிகளாகிய உபய சக்திகளையுடைய திருமாலே யெனவும், அவ்விருவரும் ஒருருவிற்றிகழும் எனது மாமகடன் ஞெடும் (இலக்குமியாகிய பெண்ணி ஞெடும்) நிலைபெற்று வாழ்குக என்ற குறிப்பிஞல் பிராட்டியாரின் அவதார இரகசியத்தினை அறிந்துள்ள பண்பும் வெளிப்படுகின்றது.

பிறமணவினைக் குரிய சடங்குகள் யாவும் முனிவரர் முறைப்படி யியற்றி னர். ஜனகரின் தம்பியாகிய குசத்துவஜன் என்னும் அரசரின் குமாரத்திகள் மூவரையும் பரதாதி மூவருக்கும் திருமணம் புணர்த்தியதாகவும் யாவரும் இன்புற்று அம்மிதுலாபுரியிற் சின்ஞள் வைகிப் பின்னர் அயோத்தியை யடைந்ததாயும் தெரிகிறது. பிராட்டியார் இதுகாறும் கவலையின்ன தென் றறிய வேண்டிய காலத்தை எதிர்ப்படவில்லை.

அயோத்தியில் எய்தி அரசபோகத்தை இயற்கை நியதிப்படி இருவரும் துய்த்து வருநாளில் மன்னன் இராமனுக்கு முடிபுனைவிக்க எண்ணுவதும் அதன் காரணமாக அரண்மனைக் கலகமும் வரத்திஞற் பிணிப்புண்ட அரசன் வருத்தமும் மாற்ருந்தாயின் கட்டளைப்படி இராமன் வனம்புகத் தீர்மானித்த தும் கதையின் தொடர்பாய நிகழ்ச்சிக ளென்பது எவரும் அறிந்த தொன்று. மாசற்ற மனதொடு ஒப்பற்ற சுகபோகக்கடலில் உயிரும் உடலும் போல் திளைத்திருக்கும் பிராட்டியார் தனது நாயகன் முடிபுனையும் உரிமை யிழந்து வனம் புகநேரிட்டதை நாயகனே உணர்ந்த முதலில் உணர்கின்ருர்.

பேரழகு நிறைந்து பிறந்ததாகக் கூறப்படும் இருபாலார்களிலும் அதற் குப் பொருத்தமாகிய செல்வாநுபவமோ, மனமகிழ்ச்சியோ அமைவதாக நாம் சென்ற உதாரணங்களிஞலாவது, கண்ணெதிர் நின்ற உதாரணங்களி ஞலாவது காணவில்லை. என்ருலும் அழகுடை வடிவங்களை விரும்பாத மன்பதையும் உலகில் இல்லை. இத்தகைய பலர் மனதையும் கவரக் காரணமா

யிருக்கும் அழகிற்குப் பயன் அதிர்ஷ்டம் அல்லவாயினும் அழியாப் புகழை நிலைநிறுத்தத்தக்க சிறந்த குணங்கள் என்பதில் ஐயமில்லை.

இதுகொண்டே நாமநூல் பகரு முன்னூலோர் இலங்கெழி லளவு குணமென விசைப்பர் என்றனர் அழகிலக்கண நூல் உணர்ந்த அறிஞர். குணங்களால் எய்துவது ஒழுக்கம், பரந்ததயை ஆகிய பலவும். இவைகளினால் தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்தற் கிடமுண்டாகிறது. இதனால் முத்தி யெளிதாகின்றது. ஆகவே பிரமன் படைப்பில் அமையும் பெரும் பொலிவெல்லாம் அன்னார் அருங்குணங்களையே உணர்த்துவதாகு மென்பது தெளிவு. இந்நியதியைப் பிராட்டியார் மட்டில் கடக்க முடியுமோ? அவரது தூய நறுங்குணங்களை வெளிப்படுத்த வேண்டிய காலதேவதையின் கடமை உருக்கொள்வதற்கு இவ்வரண்மனைக் கலகம் காரணமாயிற்று. அழகிற்கும் அதிர்ஷ்டத்திற்கும் ஒருவித தொடர்பு மில்லை என்பதற்கு இச்சரிதமே போதிய சான்றுமாகும்.

———:(o):———

# வீணைக் கொடியோன் வீரத் தம்பியர்

(தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பீ. ஏ.)

இலங்கை வேந்தனது தம்பியராய்த் திகழ்ந்தவர் இருவர் என்பதும், அவர்களுள், முன்னவன் கும்பகர்ணன், பின்னவன் விபீடணன் என்பதும், இராமயாதை உணர்ந்தோர் அறிவர். வீணைக் கொடியோன் வீரத் தம்பியர்களாய் இருவரது வரலாறும் அவர்தம் உள்ளத்தின் உயர்வும் கற்றோர் உளத்திற்குக் கழிபேருவகை தருவதாகும்.

இராவணன் உடன்பிறந்த கும்பகர்ணனது பெயர், இன்னும் இவ்வுலகில் பரிகாசப் பெயராக வழங்கிவருகின்றது. நித்யத்வம் கேட்கப்போய் நித்ரத்வம் கேட்டு அதன் பயனாக நெடிய உரக்கமொன்றையே தன் வாழ்க்கையின் வளனாகக் கொண்டு, இலங்கைமாநகரிலே வழ்ந்துவந்த தன்மையே இவனுக்கு இவ்வுலகில் இன்னும் நித்யத்யம் நல்கி யிருக்கின்றது. ஆனால் கம்பர்தங் கவிதையுணர்ந்த பெரும் புலவர் பலரும் இவனடைந்திருக்கும் இந்த நித்யத்வத்தைவிட உயர்ந்த பெருமையையே நம் வீரனுக்கு நல்குவர் என்பது நாமறியாத தொன்றன்று. "புனலையும், கனலையும், பிழிந்து சாறெடுக்கும்" பெற்றி வாய்ந்தவன் நம் கும்பகர்ணன் என்பதைக் கவிஞர் அழகாக எடுத்துரைத்து மகிழ்கின்றார். இன்னும் இவனது வலியை,

"ஊனுயர்ந்த உறத்தினன்
மேனிமிர்ந்த மிடுக்கினன்
தானுயர்ந்த தவத்தினன்
வானுயர்ந்த வரத்தினன்"

என்று கவியரசர் போற்றி யுரைக்கின்றார். இவ்வீரனது வீர உருவைச் சித்திரிக்க விரும்பிய கவியரசர்,

"விண்ணினை இடறுமோலி விசும்பினை நிறைக்கும்மேனி
கண்ணெனு மவையிரண்டும் கடல்களிற் பெரியவாகும்,
எண்ணினும் பெரியனன் இலங்கையர் வேந்தன் பின்னோன்
மண்ணினை அளக்க நீண்டமாலென வளர்ந்து நின்றான்"

என்று நயம்பட உரைக்கின்றார். "மேருமால்வரை என்ன விளங்கிய இராவணன் நின்ற நிலை கும்பகர்ணன் இருந்த நிலையை யொக்கும்" என்று கூறுவர் கம்பர்.

"கல்லன்றோ நீராடுங் காலத்து கால்தேய்க்க
மல்லொன்று தோளாய் வடமேரு"

என்று அழகொழுக எழுதி யமைக்கின்றார். அக்கவிதையில் பல விடங்களி

லும் இராவணனை வடமேருவுக்கு உவமையாக வைக்கும் கம்பரே அவ்வட மேருவை கும்பகர்ணன் நீராடுங் காலத்து கால் தேய்க்க வைக்கப்பெற்ற கல் லுக்கு உவமை கூறுகின்றார். இம்மாற்றத்தால் இவன் பெரிய உரு அமைந்த பெருமகன் என்பது அறிஞர் ஆராய்ந் தறியத்தக்கதாய் அமைந்துள்ளது.

கவியரசர் கம்பர் இத்தகைய வீரனை நமக்கு நித்திரை நிலையில் தான் முதல் முதல் காட்டுகின்றார். செவிக்குத் தேனென இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகனான அனுமான் சீதையைத் தேடி இலங்கை வந்த வன், கும்பகர்ணனைக் "கயக்கமில் துயிற்சி நிலையில்" தான் காண்கின்றான். வானவர் மகளிர், கால் வருட, உறக்கமெய்திய நிலையில் அவன்றன் நாசியில் எழுந்த சுவாசம், உலகெலாம் துடைக்கும் மாருதம் "ஊழியின் வரவுபார்த் துழல்வதொத்தது." இவன் விடுகின்ற மூச்சு வீதியோடு செல்லும் வலியுடை வாயு புத்திரனையும் திடீரென தடுத்து நிறுத்தி அவன்றன் மூக்குவரையிலும் இழுத்துச் செல்லும் வலியுடையதாயிருந்தும் அடல்மிகுந்த அனுமன் கூசிக் குதித்து விதிர்த்துத் தப்பிக்கொள்கின்ற திறமும் கம்பர் தங் கவி நலத்தால் அமைந்த பொருள்களாகும்.

இனி, இவ்வீரன் இராவணனது மந்திரக்கிழவர் அமைந்த அவையை அழகு செய்கின்றான். ஆழ்ந்த உறக்கத்திற்குப் பின் அறிவுதெழிந்தெழுந்த இக்குன்றாத வலியுடைய கும்பகர்ணன் அரக்கர்கோனுக்கு அறிவூட்ட விரை கின்றான். அறத்தின் வழிநின்ற ஆரியர்கோனது மனைவியை வஞ்சனையால் கவர்ந்து அசோக வனிதையில் சிறைவைத்த அரக்கர்கோனது அடாத செயல்,

"ஓவியமைந்த நகர் தீயுண வுளைந்தாய்
கோவியல் அழிந்ததென வேறொரு குலத்தோன்
தேவியை நயந்து சிறைவைத்த செயல் நன்றோ
பாவியர் உறும்பழி இதிற்பழியுமுண்டோ"

என்று கடிந்து கூறும் கும்பகர்ணனது குறைவிலா அறநெறி போற்றுதற் குரியதேயாகும். இராவணன் இயற்றிய இவ்வொரு செயலால் அரக்கர்தம் புகழே அழிந்து தேய்வதாயிறறு என்று வீரன் வலியுறுத்துகின்றான்.

"என்றொருவன் இல்லுறை தவத்தியை இரங்காய்
வன்றொழிலினாய் மறை துறந்து சிறை வைத்தாய்
அன்றொழிவதாயினும் அரக்கர் புகழைய
புன்றொழிலினாலிசை பொறுத்தல் புலமைத்தே"

என்று குரைகழல் அணிந்த கும்பகர்ணன் கொதித்துக் கூறும் மொழிகள் நலஞ்சான்றதாகும். அறநெறி தவறா அருந்தகையான கும்பகர்ணன் இராவ ணன் இயற்றிய இழிவுடைச் செயலை அறவே கடிந்துரைத்த காலத்தும் சிறை செய்த சீதையை விடுத்து அதனால் ஆற்றலற்றவர் அரக்கர் என்னும் பெரும் பழி தன்னையும் தன்னினத்தையும் சுற்றும் என்றும் மானத்தை நினைந்து சீதையை விட்டு தன் பகைவனிடம் அடி பணிவதைவிட போரேற்று போரில் மாண்டு மடிவதே புகழெனக் கருதுகின்றான்.

"சிட்டர் செயல் செய்திலை குலச்சிறுமை செய்தாய்
மட்டவிர்மலர் குழலினாளையினி மன்னா

விட்டிது மேலினியமாதுமவர் வெல்லப்
பட்டிதுமேல் அதுவும் நன்று பழியன்றால்"

என்று அரக்கர் வீரன் பெருமிதத்தோடு கூறும் செஞ்சொற்கள் அவனுடைய புகழ் குன்றாத பெரிய உள்ளத்தை விளக்குவதாகும்.

இத்தகைய வீரனது இளைய தம்பியாய் விபீடணன் இலங்குகின்றான். வேந்தர் வேதியர் மேலுளோர் கீழுளோர் விரும்பப்போந்த புண்ணியனை விபீடணனை முதன் முதல் கண்ட அனுமனும் "குற்றமில்லதோர் குணமுளனிவனெனக் கொண்டு" போற்றும் பான்மையொன்றே அவன்றன் புகழை இனிது விளக்கும்.

பொய்யும் களவும் பாதகமும் பொல்லாவொழுக்கும் அவை கடிந்து
மெய்யுந் தயாவும் தருமமுடன் விளங்கும் பொறையு மிவைபூண்டு
செய்யுஞ் செயல்களவையெல்லாம் சிட்டர் செய்யுஞ் செயலாகி
ஐயன் புகழ் வீடணன் மறைகளறைந்த அறத்தின் வழிநின்றான்

என்னும் பெற்றியொன்றே அவன் அறநெறிதவறா அருந்தகை என்பதை வலியுறுத்தல் போதிய சான்றாகும்.

இராவணன் அவைக்களத்தே அங்கம் பெற்ற வீரன் அரக்கர்கோனுக்கு ஏற்ற இடந்தோறும் உற்ற நீதிகளை எடுத்தெடுத்துரைத்து அவனையிடித்து வந்தான். நீதியின் நெறி வழாது நின்ற வீடணன் தன் அண்ணல், தூது வந்த அனுமனைக் கொல்ல எண்ணிய காலத்து, தூதுவனைக் கொல்லுதல் அரச தருமம் அன்று என்பதை அழகாக எடுத்துரைக்கின்றார்.

"அந்தணன் உலகமூன்றும் ஆதியின் அறத்தினாற்றல்
தந்தவன் அன்புக்கான்ற தவநெறியுணர்ந்து தக்கோய்!
இந்திரன் கருமமாற்றும் இறைவனீயியம்புதூது
வந்தனென் என்ற பின்பும் கொல்தியோமறைகள் வல்லோய்"

என்றும்,

"பூதலப்பரப்பின் அடைப்பொருட்டின் உட்புறத்துப் பொய்தீர்
வேதமுற்றியங்குவைப் பின் வேறு வேறிடத்து வேந்தர்
மாதரைக் கொலை செய்தார்கள் உளரென வரினும் வந்த
தூதரைக் கொன்றுளார்கள் யாவரே தொல்லை நல்லோர்"

என்னும் அறநெறியை அண்ணலுக்கெடுத்தோதி அவனை நெறிதவறா நீர்மையுடையவனாக்கி மகிழ்கின்றான். இதையுணர்ந்த அனுமனும்,

"மாதரைக் கோறலும் மறத்து நீங்கிய
ஆதரைக் கோறலும் அழிவு செய்யினும்
தூதரைக் கோறலும் தூயதன்றமென
ஏதுவிற் சிறந்தென எடுத்துக் காட்டினான்"

என்று இராம வீரனிடத்து இவன்றன் புகழை எடுத்தியம்புவானாயினன். இன்னும் இலங்கைமாநகர் எரியினுக்கிரையாய் அழிந்ததற்காக ஏங்கி வருந்தும் இராவணனை நோக்கி,

"கோனகர் முழுவதும் நினது கொற்றமும்
சானகியெனும் பெயருலகின்றம்மனை
ஆனவன் கற்பினால் வெந்ததல்லதோர்
வானரஞ் சுட்ட தென்றுணர்தல் மாட்சியோ"

என்று சீதையின் நிறையின் திட்பத்தை எடுத்து விளக்கி,

"இசையுஞ் செய்கையும் உயர்குலத்தியற்கையும் எஞ்ச
வசையும் கீழ்மையும் மீக்கொளகிளையொடும் மடியாது
அசைவில் கற்பின் அவ்வணங்கை விட்டருளிதி"

என்று அறிஞரில் மிக்கோனான வீடணன் கூறும் அறநெறி அழகுடையதாக வே அமைந்துள்ளது.

இவ்விடத்து வீணைக்கொடியோன் வீரத் தம்பியான கும்பகர்ணனையும், வீடணனையும் ஒப்பிட்டு நோக்கினால் ஒருவரில் ஒருவர் எத்துணை ஏற்றமும் தாழ்வும் உடையவர் என்பது காண்போம். இரு தம்பியரும் அண்ணலுக்கு அறநெறியெடுத்தோதுகின்றார்கள். வீரமே பெரிதென நினைந்த வீரன் அற நெறி உணர்ந்த பெருமகனாயினும் சீதையை விடுத்து அதனால் அரக்கர் குலத் திற்கே அழியாப் பழி பூணுவதை விட தன் ஆவியை விடுத்தேனும் அரக்கர் தம் புகழை நிலை நிறுத்த நினைக்கின்றான். அறநெறி நின்று அதன் வழி யொழுகலை பெரும் புகழென நினைத்து வாழும் அறிஞர் பெருமகன் பகைவன் கால்பணிந்தேற்கும் பழியைவிட அறநெறி நிறுவ, தன் கடனாற்றுதலே தன் கருமமென நினைக்கின்றான். இருவர்தம் மன நிலையும் ஏற்றமுடையதே யாகும், எனினும் இவ்விருவரிலும் நன்றி மறவா நல்லாக்கனாய் விளங்கிய பெருமை கும்பகர்ணனுக்கே உரியதாகும். தருமமல் நெறியில் தலைப்படும் தமையனைத் திருத்த முயன்ற திலவன் தன் முயற்சி பயன்படாமை கண்டு மனமாழ்கி மயங்குகின்றான். ஆனால் வீரன் தன் தமையனைத் தனியே விடுத்து பகைவனின் பாதம் பணிதலை விட அவன் பொருட்டு அமர்புரிந்து ஆவி துறத்தலே மாண்புடையதென நினைக்கின்றான்.

"கருத்திலா இறைவன் தீமை கருதினால் அதனைக்காத்து
திருத்தலமாகில் நன்றே திருத்துதல் தீராதாயின்
பொருத்துறு பொருளுண்டாமோ பொருதொழிற் குரியாராகி
ஒருத்தரின் முன்னஞ்சாதல் உண்டவர் குரியதம்மா"

என்று கூறும் அறநெறி தலை நின்ற அண்ணல் தன் மொழிகள் நலஞ் சான்ற தாகும்.

ஆனால் இவன்றன் தம்பியாய் எழுந்த வீடணன் மன நிலை வேறு வித மாக அமைந்துள்ளது. அஞ்சாத வலியுடைய அரக்கர்கோன் தம்பி சொன்ன நீதியின் நெறி நிற்க நினையாது, அந்நீதி சொன்னவனையே,

"அஞ்சினையாதலின், அமர்க்கு மாளலை,
தஞ்சென மனிதர் பால் வைத்த சார்பினை,

வஞ்சனே மனத்தினை, பிறப்பு மாற்றினை,
நஞ்சினையுடன் கொடு வாழ்தல் நன்றரோ"

என இகழ்ந்துரைத்து தன் முன்னின்று உடனே நீங்கும்படி ஏவவும், அதையே காரணமாகக் கொண்டு உடனே நாயகன் மலர்க்கழல் நணுக விரைகின்றான். தமையன் தீநெறி செய்கின்றான் என்பதையுணர்ந்தும் அவனைத் துறந்து பகைவரைச் சேர்ந்து வாழ இறையளவும் இரையாத நன்றிமறவா நல்லரக்கனது உள்ளத்தையும் தன் தமையன் தான் கூறிய அறநெறியோராது தன்னைக் கடிந்ததற்காக பகைவன் பக்கம் சென்று அவன்றன் அடிபணியும் அறிஞன் உள்ளத்தையும் ஒப்பிட்டு நோக்கினால் புகழ் பெருதற்குரியார் யாவர் என்பது காண்போம்.

"தருமமும் ஞானமும் தவமும் வேலியாய்
மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்க்
கருணையங் கோயிலுள் இருந்த கண்ணனது"

கழலடி இறைஞ்சி வாழும் இலங்கை வேந்தன் தனது அண்ணனை கும்பகர்ணனையும் தன் பக்கத்தே சேர்த்துக்கொள்ள எண்ணுகின்றான். அறநெறி துறந்த அரக்கர்கோனைக் கைவிட்டு இருமையும் தரும் பெருமானாய இராமனைச் சேர்ந்து வாழ்வதே சிறப்புடையதாகும் என்றுரைத்த தம்பியை நோக்கி,

நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிது நான் வளர்த்துப் பின்னை
போர்க்கோலஞ் செய்துவிட்டார்க்கு உயிர் கொடாது அங்குப் போகேன்

என்று கூறும் உறுதிமொழியும்,

"செம்பிட்டுச் செய்த இஞ்சித்திருநகர்ச் செல்வந்தேறி
வம்பிட்ட தெரியல் எம்முன் உயிர்கொண்ட பகையை வாழ்த்தி
அம்பிட்டுத்துள்ளங்கொண்ட புண்ணுடை நெஞ்சோடைய
கும்பிட்டு வாழ்கிலேன் கூற்றையுமாடல் கொண்டேன்"

என்று மானமே பெரிதென நினைந்து கூறும் குணங்களால் உயர்ந்த அரக்க வீரனது செம்மை சான்ற சொற்கள் அழகுடையதேயாகும். கூற்றையுமாடல் கொள்ளும் தனது வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பார்த்த குலத்து மானம் தீர்ந்திலாத கொற்றவனது உள்ளத்தில் தனது வாழ்க்கையே உயரியதெனத் தோன்றுகின்றது. அவன்றன் உள்ளத்தின் உயர்வே பெருமையுடையதும் ஆகும் என்பதும் கம்பர்தங் கருத்தாய் இலங்கக் காண்கின்றோம். மாற்றாரைத் தொழுது வாழ்வதிலும் தன் மானம் காப்பதே தன் கடனெனக்கொண்ட திருமகன் அமர்க்களத்தே ஆவியை விடுத்து அழியாப் புகழெய்துகின்றான். மானமே பெரிதெனக்கொண்டு அதனால் புகழ்பட வாழ்ந்தவன் கும்பகர்ணன் என்பதும் வாழ்க்கையின் நலனையே பெரிதும் கருதி அதனால் குலமணம் போற்றாத தலைவனாய் இலங்கியவன் வீடணன் என்பதும் இதுவரை எடுத்துக் காட்டிய ஒன்றிரண்டு குறிப்புகளால் விளங்கும்.





# உலக அநுபவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

ஆராய்ச்சி செய்பவர்களுடைய பொறுப்பைப்பற்றி முன் கட்டுரையில் சொல்லப்பட்டது. தம்முடைய கொள்கைகளைப் பற்றியோ, மத போதனைக்கு விரோதமாகவோ இருக்கிறதென்று ஒரு விஷயத்தைத் தள்ளிவிடக்கூடாது, அறிவு வளர்ந்துகொண்டே போகிறது. அறிவின் மூச்சுக் காற்று உண்மை, தாக்ஷண்யமல்ல. இத்தனை வருஷங்களாக விருக்கின்றதே அல்லது இத்தனை பேர் உண்மை யெனக் கருதுகிறார்களே யென்றாவது ஒரு சங்கதியை உண்மையென நிர்ணயிக்கக்கூடாது. பூர்வம் உண்மை யென்பது இப்போது உண்மை யில்லை யென்று சொல்வதால் அக்காலத்தி லிருந்தவர்கள் முட்டாள்க ளென்பதில்லை. அப்படிச் சொல்வதால் நாம்தான் முட்டாள்களாவோம்.

இன்னொன்று. இப்போது ஒரு விஷயத்திற்குள்ள அர்த்தம் அந்தக் காலத்திலும் தெரிந்திருந்ததெனச் சொல்வது சிலருடைய வழக்கம். இக்காலத்தில் ‘ஏரோப்ளேன்’ இருக்கிறதென்றால் அக்காலத்திலும் இவை யிருந்தனவென்று இச்சாரார் வற்புறுத்துகின்றனர். இது என்ன மடமை! ஏரோப்ளேன் செய்யும் விதம் அதைப்பற்றிய இரசாயனம் முதலியவை இருபதாம் நூற்றாண்டில் கண்டு பிடிக்கப்பட்டு இன்னும் சீர்திருத்தமடையவில்லை, விபத்துக்கள் அடிக்கடி நேருகின்றன. அப்படியிருக்க, பல்லாயிர மாண்டுகளுக்கு முன் விமானங்கள், இறக்கைக் குதிரைகள் கட்டிய வண்டிகள் இருந்தன வென்றால் யார் நம்புவார்கள்? அல்லது இவைகளைச் செய்யும் விதத்தை ஜனங்கள் மறந்துவிட்டனரா? மறந்துவிட்டனராயின், இவைகள் இருந்ததைமாத்திரம் எப்படி யறிவார்கள்? மாதிரிக்காவது, மியூஸியத்தில் வைப்பதற்கு ஒரு விமான மிருக்கக்கூடாதா? பிள்ளைகள் தம்முடைய பள்ளிக்கூடங்களைப்பற்றியும், பெற்றோரைப்பற்றியும் பெருமை பேசுவது வழக்கம். ஆராய்ச்சி செய்பவர்கள் உண்மையை நாடினவர்கள். கேவலம் பிள்ளைகளில்லை யாதலால் அவர்கள் டம்பமாய்த் தம்முடைய முன்னோர்களைப் பேசலாகாது. புராணங்களெல்லாம் வாசிப்பதற்கு இன்பகரமா யிருக்கலாமேயன்றி பிரமாண மெனக் கருதலாகாது.

நமது தேசத்தில் சிலருடைய வழக்கமென்னவெனில் இக்காலத்தைவிட முன்காலத்தில் பயிற்சி அதிக மென்பது. உதாரணமாக, இக்காலத்துப் படிப்பு என்ன பிரயோஜனம்? அக்காலத்தில் இன்னும் எவ்வளவு அரிய விஷயங்கள் தெரியும் தெரியுமா? என்கிறார்கள். ஆம், அக்காலத்துப் படிப்பு இக்காலத்தைவிட மிக மிகக் குறைவாகவே யிருந்தது! இருபது முப்பது வருஷங்களுக்கு முன்னிருந்த எப். ஏ., பி. ஏ., வகுப்பு பரீக்ஷைக் கேள்விகளைப் பார்த்தால் இப்போது நகைப்புத்தான் உண்டாகிறது. அக்காலத்தில் இலக்க

கணத்தை மாத்திரம் வற்புறுத்தி மண்டையை உடைத்து உள்ளே புகுத்துவதுபோல் கற்பித்து வந்தார்கள். அக்காலத்தில் பாட புத்தகங்கள் தவிர வேறு விஷயங்கள் மாணவர்களுக்குத் தெரியாது. அதையே நெட்டுருப் போட்டு இப்போதும் ஒன்றிரண்டு வரிகளை ஒப்பித்தால் பெரிய பாண்டித்திய மென நினைத்திருக்கிறார்கள். பத்திரிகைகள் படித்த மாணவர்கள் நூற்றுக்கு இரண்டு மூன்றுகூட தேறுவது அரிது என்று கேள்வி. இக்காலத்திலோ அப்படியல்ல. பொதுவிஷயங்களெத்தனையோ மாணவர்கள் அறிகிறார்கள். உலக அனுபவ மதிகமாகிறது. இதுவே யல்லவோ கல்வித் தேர்ச்சி. ஒன்றிரண்டு புத்தகங்களைப் படிப்பது உலக அனுபவத்தில் எப்படிப்போதும். உலகத்தின் மற்ற பாகங்களில் என்ன நடக்கிற தென்பதை யறியாது வெறும் பழம் புத்தகத்தை ஓதினால் யாதுபயன்? இக் காலத்து பீ. ஏ. அக்காலத்து மெட்ரிக் குலேஷனுக்குச் சரியென்று பலர் சொல்லக்கேட்டிருக்கிறேன். இதை தலைகீழாக்கினால் சரியாயிருக்கலாமெனத் தோன்றுகிறது.

இதுபோலவே அனேகர், நமது முன்னோர்கள் இப்படி, அவர்கள் வானத்தை வில்லாய் வளைப்பார்கள், மணலைக் கயிறாய்த் திரிப்பார்கள் என்று சொல்வது வழக்கம் சுத்த மடமை. (இதை வாசிக்கும் பெரியோர்கள் என்னை மன்னிப்பார்களாக. உண்மைக்காக தாக்ஷிண்யத்தைக் கவனிக்காமல் எழுதுகிறேன்.) இக்காலத்திலிருக்கும் உணர்ச்சியில் நூறில் ஒரு பாகமாவது அப்போதிருந்ததாயின் நமது தேசம் இக்கதிக்கு வந்திராது. நம்மை விட புத்திசாலிகளாயிருந்தால் ஏன் நாம் இப்படி பரிதவிக்கிறோம்? அன்று, ஜஸ்டிஸ் ராமேஸம் அவர்கள் ஒரு விசாரணையில் "இம்மாதிரி பால்ய விவாகம் முதலியவற்றால் நமது தேசம் இந்த நிலைமைக்கு வந்துவிட்டது" என்று கூறினார். அக்காலத்திலிருந்த மூட எண்ணங்களும் மூடக்கொள்கைகளும் ஒழிந்தால்தான் நமது தேசத்திற்கு விமோசனமுண்டு என்பதை அன்பர்கள் கவனிப்பார்களாக. அக்காலத்தில் சூரியனின் சாயலைப் பார்த்து மணி சொல்வார்கள். இப்போது கடிகாரத்தைத் தேடுகிறார்கள் என்றார் ஒரு பெரியார். ஆம், கடிகாரமிருக்கும்போது, அதைக்கொண்டு சரியான மணியைக் கூறலாமென்றிருக்கும்போது ஏன் உத்தேச கணக்குச் செய்யவேண்டும்? அக் காலத்தில் வானத்தின் நிறத்தைக்கொண்டு மழைவரும் வராதென்று சொல்வார்கள். இப்போது சொல்வார்களா? ஏன் சொல்லவேண்டும்? அதற்கென்றுதான் பயிற்சி பெற்ற வானசாஸ்திரிகள் தினத்திற்கு தினம் பத்திரிகைகளில் சீதோஷ்ண ஸ்திதியைக் குறித்து எழுதுகிறார்களே! அக்காலத்தில் தாமே எல்லா நல்ல விஷயங்களையும் வைத்துக்கொண்டார்கள். மற்றவருக்குக் கொடுத்தால் பலன் போய்விடுமென்று பயமாம். இக் காலத்தில் எத்தனை புத்தகங்கள், எத்தனை பத்திரிகைகள், எத்தனை உபன்னியாசங்கள். இதுவல்லவோ நல்ல காலம், அதுவல்லவோ மூட காலம். வைத்தியனென்றால் மருந்தை இன்னொருவருக்குச் சொல்லிக்கொடுப்பது பாபம் என்றிருந்தார்களே அக்காலத்தில். அதுவோ நியாயம்? சில தினங்களுக்கு முன் ஒரு வைணவர் ஸ்ரீ பாஷ்யத்தை வாசித்துக்கொண்டிருந்தார். ஸ்மார்த்தனான நான் போனேன். உடனே படிப்பை நிறுத்திக்கொண்டு புத்தகத்தையும் மூடிவிட்டார். என்னவென்றால் ஸ்ரீ பாஷ்யத்தை வைணவரல்லாத செவிகளில் கேட்கக்கூடாதாம்! இதுவோ ஸ்ரீ ராமானுஜருடைய சித்தாந்தம்! அவர் ஒரு சாராருக்கா தமது பாஷ்யத்தை அருளினார்! நன்று

நன்று. இப்படிப் படித்தோர் எனப் பேர் வைத்திருப்பவர்கள் செய்ய, இப் பெரிய கிரந்தங்களை மேனாட்டார் தம்முடைய பாஷைகளில் மொழிபெயர்த்துப் படித்து ஆனந்திக்கிறார்கள். நம் நிபுணர்கள் அதைத் தடுத்துப் பார்க்கலாமே! அந்தோ உண்டிக் கழகு விருந்தோடுண்ணல் என்பதும் பொய்யோ! நம்மிடம் அமிருதம் இருக்குமாயின் அதை பிறரும் அனுபவித்து ஆனந்திக்கா விட்டால் யாது பிரயோஜனம்? வாஸ்தவத்தில் ஒன்று மேன்மையுள்ளதாயின், அது எல்லோராலும் அனுபவிக்கப்பட்டால் கெடுமா? இது நல்லது, ஆனால் உனக்காகாது என்றால் அது என்ன படித்ததற்கு அழகா? அல்லது மூட்டாள் தனத்திற்கு ஓர் அத்தாக்ஷியா? நமது தேசம் இவ்வாறு க்ஷீணித்து, இலக்கியங்கள் பாழாகி, அரிய பெரிய நூல்கள் மாசடைந்து இருந்த இடந்தெரியாமற் போனதற்குக் காரணம் யாராயிருந்தாலும் அவர்கள் பாபிகளென்றே சொல்ல வேண்டும்.

இதன் மூலமாக நான் ஆனந்தபோதினி பத்திராதிபரைக் கேட்டுக் கொள்வது என்னவெனில், அவர் தன்னுடைய பத்திரிகையில் தேர்ந்த நிபுணர்களைக்கொண்டு நமது பழைய இதிகாச புராணங்கள், அரிய பெரிய கிரந்தங்கள் முதலியவற்றை மொழிபெயர்த்தாவது ஆனந்தன் வாயிலாக எழுதுவிக்க வேண்டுமென்பதே. தற்காலத்தில் வட இந்தியாவில் இம்மாதிரி ஆங்கிலத்தில் செய்து வருகின்றனர். தமிழில் நாமும் செய்வது அத்தியாவசியமாகும். இதை இப்போதே ஆரம்பிக்கவும் வேண்டும். மதம் என்பது என்ன என்று இதிலிருந்து நமக்கெல்லோருக்கும் தெரியவேண்டும். இப்போது 'இந்து' என்னும் மதஸ்தன் சிதம்பரத்திற்குச் சென்று நடராஜனைக் கண்டு களிப்புறுகிறான். பெரிய பாளயத்தில் ஆடு கோழியும் வெட்டுகிறான். முனீஸ்வரன், கங்கங்காவென்று அனேக கிராம தேவதைகளுக்குப் பூஜைகள் படைக்கிறான். இதன் மத்தியில் அல்லா பண்டிகை வந்தால் ஆலி ஜூலா வென்றும் கத்துகிறான். கத்தோலி திருவிழாவிலும் கலந்துகொள்கிறான். இந்து மதம் இப்படியா யிருக்கவேண்டும்? கோயில்களில் விபூதி குங்குமம் வழங்குவதோடு சரியாகிவிடுகிறது. விஷ்ணு ஸ்தலங்களிலும் அனேக சிவ ஸ்தலங்களிலும் வயிற்றுக்கும் கிடைக்கிறது. செவிக்குணவில்லாதபோது சிறிது வயிற்றுக்கும் ஈயப்படுமென்பது ஒரு வழியில் உண்மையாகிவிடுகிறது. செவிக்கு உணவுதான் கிடையாதே. அதை வட்டியும் முதலும் சேர்த்து வயிற்றுக்குக் கொடுப்போமே யென்பது இவர்களுடைய கொள்கைபோலும்! நமது மதத்தில் இவ்வளவு கசுமலங்களிருக்கின்றன. இவற்றை விலக்கினாலொழிய நமது மதம் க்ஷீணித்துவிடுமென்பது நிச்சயம். பண்டித மாளவியாஜி சமீபத்தில் விடுத்த செய்தியைப் பார்த்திருக்கலாம். அதில் தீண்டாதார் என்று சொல்லப்பட்டவருக்கு மந்திர தீக்ஷை கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொண்டிருக்கிறார். கடவுளுடைய திருநாமத்தை எந்த வாய்தான் உச்சரித்தாலும் அந்த நாமம் கெட்டுப்போகுமா? வால்மீகி யென்னும் வேடனுக்கு நாரதர் ராமநாமத்தை உபதேசித்ததா லல்லவோ ராமாயணம் கிடைக்கப்பெற்றோம். அம்மாதிரி தீண்டாதவரி லொருவன் ஏன் அரிய விஷயமொன்றை எடுத்துக் காட்டக்கூடாது?

(தொடரும்.)

# லைப் இன்ஷியூரென்ஸ் பகுதி

(இன்ஷியூரென்ஸ்.)

## நரன் பிரயாணம்.

(தொகுதி-17. பகுதி-9. 666-ம் பக்கத் தொடர்ச்சி.)

போக்கிரி சென்றவுடன் இன்ஷியூரென்ஸ் அவசரக்காரனையும் நரனையும் பார்த்து, "நான் கிழவனாயினும் எனக்கு இவ்வழியெல்லாம் தெரியும். நான் பன்முறை இவ்வழி போயிருக்கிறேன். ஆகையால் நீங்களிருவரும் என்னை நம்பிக் கூடவே வாருங்கள்" என்று சொல்லி நடந்தான்.

பெரிய பாலைவனம். கடுமையாகச் சூரியன் பிரகாசிக்கின்றான். என்ன தான் காலுக்குப் பாதரக்ஷை யிருந்தும் உஷ்ணம் பொறுக்க முடியவில்லை. வெய்யிலின் தாபத்தால் சற்று தூரத்தில் ஓரழகிய ஆறு ஓடுவதுபோல் தோன்றிற்று. "ஐயா, அதோ அந்த ஆறில் சாயங்காலம் வரை உட்கார்ந்திருந்துவிட்டுப் போவோம்" என்றான் அவசரக்காரன். இன்ஷியூரென்ஸ், "அது உண்மையாக ஆறு அன்று. பாலைவனப் போலித்தோற்றம். சும்மா வாருங்கள்" என்று நடந்தார்.

மணி நான்காயிற்று. வெய்யிலின் கொடுமை சற்று குறைந்தது. அவர்கள் ஒரு மடுவண்டை வந்தார்கள். "இந்த மடுவில் ஸ்நானம் செய்து போவோம்" என்றான் நரன். அதற்கு கிழவனார், இந்த மடுவிற்கு முழுமோசப் படுகுழியென்று பெயர். இதில் இறங்கினால் கரையேற முடியாது" என்றார்.

ஆனால் அவசரக்காரன் "அப்பப்பா, என்ன நிர்ப்பந்தமடா! இங்கு போகாதே, அங்கு நில்லாதே, இதில் குளிக்காதே, அதைக் குடிக்காதே. இதென்ன, வழிகாட்டுகிறானா, சிறைச்சாலைக்கு அழைத்துச் செல்கிறானா. நான் இந்த மடுவில் இறங்கித்தான் குளிக்கப்போகிறேன். நான் நீந்துவதில் வெகுமதிகளைப் பெற்றிருக்கிறே னென்பது இவனுக்குத் தெரியாது போலும்," என்று சொல்லிவிட்டு, ஆடைகளைக் களைந்துவிட்டு, ஓடினான். கிழவர், அவனைக் குறுக்கிட்டு, "ஐயா, நான் சொல்வதைக்கேளும், என்னைத் திட்டினாலும் பாதகமில்லை. இதில் இறங்க வேண்டாம். வாரும் வழியே செல்வோம்" என்றார். அவரை அப்புறம் தள்ளிவிட்டு, தண்ணீரில் பாய்ந்தான். உள்ளே மூழ்கிப் போனான். இருமுறை, தண்ணீர் வெளியே தூக்கிற்று. "ஐயோ" என்று ஓல மிட்டான். "என்னைக் காப்பாற்றும்" என்று கதறினான். ஆனால் யார் போவது? அப்படியே உள்ளே போய் விட்டான்.

கிழவன் தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, நரனைப்பார்த்து, "ஐயா, இவற்றிலிருந்து நீயாவது சில நீதிகளைக் கற்றுக்கொள். என்னைப்

பூரணமாக நம்பு. நான் அனுபவ முள்ளவன். என்னை விடாமல் பின் தொடர்வாயாக" வென்று மேலே நடந்தார். நரனும் சரியென்று அவர் பின்னாலேயே சென்றான். போகும் வழியில் ஒரு சிறிய நகரம் காணப்பட்டது. அது மிகவும் அழகாகவும் நாகரிகமாகவும் தோன்றிற்று. வீதிகளிலிருந்த அதிசயங்களைக் கண்டு நரன் ஆச்சரியமடைந்தான். அங்குள்ள ஸ்திரீகள் தேவகன்னிகைகளைப் போலிருக்கவே நரனுக்கு மதி மயங்கிற்று. அவர்களில் ஒருத்தி மீது அவன் மையல் கொண்டான். அவளும் இவன் மீது அன்பு பாராட்டிய மாதிரி தோன்றவே, நரனுக்கு அவளைக்காண வேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. இன்ஷியூரென்ஸைப் பார்த்து "ஐயா, என்னுடைய பணம் உம்மிடம் நிறையச் சேர்ந்திருக்கிறது. அதில் ஒரு பாகத்தைக் கொடும். இந்நகரில் சிலநாள் தங்கி யிருந்து பிறகு பிரயாணப்படுவோம்" என்றான். இவன் கருத்தை யுணர்ந்த இன்ஷியூரென்ஸ், "அப்பா, நீ அனுபவமற்றவன். இந்த ஊரைப்பற்றி உனக்கு ஒன்றுந் தெரியாது. வெளுத்ததெல்லாம் பாலல்ல; நீ இங்கு தங்குவது நியாய மன்று. பணம் கொஞ்சம் சேர்ந்திருப்பது வாஸ்தவந்தான். அதில் ஒருபாகம் கொடுக்கவும் கூடும். ஆயினும் உன் குடும்பத்தின் க்ஷேமார்த்தமாக வல்லவா இந்தப் பிரயாணத்தைத் தொடங்கினாய். மத்தியில் நீ அந்தப் பணத்தைக் கேட்பது தவறு" என்றார்.

நரன், "ஐயா, என்னுடைய பணத்தைத் திருப்பிக் கொடுப்பதே உமக்குக் கஷ்டமா யிருக்கிறதே, மத்தியில் எனக்கேதாவது ஆபத்து நேர்ந்தால், நான் கட்டாத தொகையையும் சேர்த்துப் பெரிய நிதியாக குடும்பத்திற்கு நீரா கொடுப்பவர்" என்றான்.

இன்ஷியூரென்ஸ், "நானென்ன செய்யட்டும். உன் விதிப்பயன்படி ஆகிறது. இந்த நீ கொடுத்ததில் மூன்றிலொரு பங்கு கடனாகக் கொடுக்கிறேன். இந்த இடத்தில் நீ ஆறு மாதத்திற்குமேல் தங்கினால் நான் உன்னை மேலே அழைத்துச் செல்ல முடியாது" என்றார்.

---

எப்படியாவது விட்டால் போதுமென்று நரன் ஒப்புக்கொண்டு அவரை விட்டு நீங்கினான். ஒரு ஹோட்டலிற்குள் சென்று ஒரு மேஜையண்டை உட்கார்ந்தான். தனக்கு வேண்டிய உணவை வரவழைத்துச் சாப்பிட்டுக் கொண்டே யிருக்கும்போது தான் காதல்கொண்ட ஸ்திரீ உள்ளே நுழைந்தாள். நரனுக்கு அருகாமையிலிருந்த மேஜைமீது அவள் உட்கார்ந்துகொண்டாள். அப்போது அவளுடைய கைக்குட்டை காற்றினாலோ என்னவோ பறந்து இவன் மேஜைமீது விழவே, நரனுக்கு அம்மாதுடன் பேசச் சந்தர்ப்பம் வாய்த்தது. அக்குட்டையை எடுத்துக்கொண்டு அவளிடம் கொடுத்தான் அப்போதுதான் அது முதலில் காணமற் போய்விட்டதென நினைப்பவள் போல் திடுக்கிட்டு, நாணி அதை வாங்கிக்கொண்டு புன்னகை கொண்டாள். அதன் பிறகு இருவருக்கும் சம்பாஷணையாயிற்று. சாப்பிட்டானவுடன் நரன் அவளைப் பின் தொடர்ந்து சென்றான். ஒரு வீட்டை யடைந்தவுடன் அம்மாது கதவைச் சாத்தி விட்டாள். நரன் மதி மயக்கத்தினால் ஒன்றையும் அறியவில்லை, அதன் பின் அம்மாது, "பிரபுவே, நீங்கள் இந்த வீட்டிற்கு வர என்ன பாக்கியஞ் செய்தேனோ, என்னாலியன்றது இந்தக் கோப்பைப் பால் தான். இதை அருந்த வேணுமாய்ப் பிரார்த்திக்கிறேன்" என்று வணக்கமாய்ச் சொன்னாள். நரன் ஆனந்த சாகரத்தில் மூழ்கினவனாய் அதை உட்கொண்டான். அப்படியே மயங்கி விழுந்து விட்டான். அப்பாலில் அபினி கலந்திருந்ததை அவன் அறியான்.

நாட்கள் பல சென்றன. அடிக்கடி இன்ஷ்யூரென்ஸ் இவனுக்காகத் தேடி யலேவார். ஆறுமாதத் தவணையும் முடியுங்காலங் கிட்டிற்று. இவர் இவ னிருக்கும் இடத்தைக் கண்டுகொண்டு, அம்மாது வெளியில் போயிருக்கும் சமயம், உள்ளே புகுந்து விட்டார். இன்னும் அரைமணிநேரம் பொறுத்துச் சென்றிருந்தால் உயிர் போயிருக்கும். வெளியே தூக்கிக் கொண்டுவந்து ஒரு வைத்தியனைக்கொண்டு மயக்கந் தெளிவித்தார். நரன், சித்த ஸ்வா தீனம் பெற்றவுடன் தன் நிலைமையைக் குறித்து வெட்க மடைந்தான். இன்ஷியூரென்ஸ் அவனைப் பார்த்து, தலை தப்பியது தம்பிரான் தர்மம் என்று வைத்துக் கொள். இனிமேல் உனக்குச் சிறிதும் இடங்கொடுக்க மாட்டேன்" என்று சொல்லிச் சீக்கிரம் நரனைக் கூட்டிக்கொண்டு அவ்வூரை விட்டு நீங் கினார்.

* * * *

பல நாட்கள் கழிந்த பின், ஒரு பெரிய பட்டணவாயிலில் இருவரும் வந்து நின்றனர். அவ்வூரின் அழகை வர்ணிக்க யாரே வல்லார்? தரித்திர பட்டணத்திலிருந்து கண்ட ஸ்தூபி, ஜகஜ்ஜோதியாய்ப் பிரகாசித்துக் கொண்டு நிற்கிறது. பெரிய வீடுகள் கிளிகொஞ்சுவதுபோல் அழகாக விருந் தன. நகரவாயிலில் ஒரு வாயிற் காப்போன் நின்றிருந்தான். இன்ஷியூரென் ஸைப் பார்த்ததும் அவன் பழையநாள் ஸ்னேகிதனைப்போல் வந்தன மளித்து புன்னகைகொண்டான். இன்ஷியூரென்ஸ் ஒரு பத்திரத்தை அந்த ஆளிடம் நீட்ட, உடனே அவன் நரனுக்கு வந்தனமளித்து உள்ளே விட்டான். இன்ஷியூரென்ஸ் அவன் பின் வரவில்லை. நரன் திரும்பிப் பார்க்க, "அன் பனே, என் வேலை முடிந்தது. எனக்குச் செலவு கொடு. நான் மறுபடி யும் தரித்திர பட்டணத்திற்குச் சென்று உன்னைப்போல இங்கு வருவ தற்கு விருப்பமுள்ளவர்களை அழைத்து வரவேண்டும்" என்றார். நரன், "என் மனைவியைப்பார்த்தால் நான் சௌக்கியமாய் இங்கு வந்து விட் டேன்........" என்று முடிப்பதற்குள், "நான்தான் அப்போதே இங்கு வந்து விட்டேனே" என்று ஒரு குரல் கிளம்பிற்று. நரன் திரும்பிப் பார்த்தான். தன் மனைவியையும் குழந்தைகளையும் கண்டான். ஆனந்த பரவச மடைந் தான். "நீங்கள் எப்படி வந்தீர்கள்?" என்றான். "எல்லாம் அந்தப் புண் ணியவான் தர்மந்தான்" என்று இன்ஷியூரென்ஸைக் காட்டினாள். நரன் கண்களில் இன்பரசம் ததும்பியது. உமக்கு நான் என்ன கைம்மாறு செய் யப் போகிறேன்?" என்றான். இன்ஷியூரென்ஸ் சிரித்து, "உன் திருப்தி யும் உன் மனைவி குழந்தைகளுடைய சந்தோஷக் குறிகளும்தான் எனக்குக் கைம்மாறு," என்று சொல்லித் திரும்பினார்.

உலகத்தில் ஏழு அதிசயங்கள்தான் உண்டென்று நினைத்திருந்தார்கள். ஆனால் எட்டாமதிசயமு மொன்றிருக்கிறதென்று இப்போது தெரிகிறது. அவ்வதிசயமே இன்ஷியூரென்ஸ்; அதிலும் "லைப் இன்ஷியூரென்ஸ்" என்கிற ஜீவிய பாதுகாப்பு. இந்த எட்டாம் அதிசயம் உலகில் பரவுவதே மோக்ஷம். அதுவே ஆனந்தம். அதுவே யாவும். யாராவது உம்மிடம் வந்து, "இன்ஷியூர் செய்திருக்கிறீர்களா" வென்று கேட்டால், "வழியே திரும்பிப் போமென்று சொல்லி ஏசாமல், உமக்கு நன்மை செய்ய வந்தவராக நினையுங்கள். நீங்கள் செய்திருந்தால் உம்முடைய நண்பர்களைச் செய்யும்படி தூண்டுங்கள். செய் யாவிட்டால் முதலில் நீங்கள் செய்துவிட்டுப் பிறகு மற்றோரைச் செய்யச் சொல்லுவது உம்முடைய முக்கிய கடமையாகும்.

# விக்கிரகங்களைப் பூஜிப்பது

('சூரபி' எழுதியது.)

[வெளியான பாகத்தின் சுருக்கம்:—இவ்வியாசம் விக்கிரக ஆராதனை கெடுதல் என்று சொல்பவர்களைத் தடுத்துரைப்பதற்கும் உள்ளவர்கள் பக்தியை மேம்படுத்தவும் தொடங்கியது. ஆயின் ஒரு மதத்தை உயர்த்தவும் இன்னொன்றைத் தாழ்த்தவும் எமது விருப்பமில்லை. கண்கண்ட விஷயங்களிலேயே வெவ்வேறு அபிப்பிராயங்கள் ஜனங்கள் கொண்டிருப்பது யாவரும் அறிந்த விஷயம். அப்படி யிருக்கத் தெய்விகமான விஷயத்தில் எல்லோரும் ஒரே அபிப்பிராயம் பெற்றிருக்கவேண்டும் என்று கட்டாயப்படுத்துவது அநீதி. ஸையன்ஸ் சம்பந்தமான விஷயத்தை ரூபித்துக் காட்ட முடியும். தெய்விக விஷயங்கள் அவ்விதம் செய்யமுடியாது. மனிதன் எப்படி உண்டாகிறான், இறந்தவுடன் எங்கே செல்கிறான் முதலிய விஷயங்கள் ஒருவரும் கண்டறியவில்லை. நாம் தெய்வத்தை எந்த விதமாக நம்புகிறோமோ அந்த விதமாக அவர் பிரசன்னமாவார். ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி நாம் நினைக்கும்போதும் நமது மனதில் ஒரு உருவம் எழுவது வழக்கம். அதேபோல தெய்வத்தின் அங்க அமைப்பும் அவரைப் பற்றி எண்ணும் பொழுதெல்லாம் நமது அகக்கண்ணின் முன் எழும். நமது மனத்தில் ஓருருவம் தங்கியிருக்க வேண்டுமானால் படம் ரூபமாகவோ, சிலை ரூபமாகவோ நமது அந்தஸ்துக்கேற்றபடி உருவம் ஏற்படுத்திக்கொள்கிறோம். அஃது நமக்கு மாத்திரம் அல்ல. மனிதர் இயல்பு. அதேபோல கடவுளுக்கும் (என்றும் காணாத கடவுளுக்கும்) படங்களும் சிலைகளும் ஏற்படுத்துவது குற்றமாகாது. ஆனால் நாம் விக்கிரகமுள்ள கோயிலுக்குள் சென்று எதைத் தொழுகிறோம்?]

## (3)—பூஜிப்பது எது?

(தொகுதி-17, பகுதி-12, 907-ம் பக்கத் தொடர்ச்சி.)

நமது பகைவர்களில் அனேகர், விக்கிரகங்களைப் பழிப்பவர், ஹிந்து மதம் க்ஷீணிப்பதில் விருப்புடையவர், கோயிலில் கல்லால் செய்யப்பட்ட ஒரு உருவத்தையே நாம் தொழுகிறோம் என்றும் அவ்விதம் செய்வது உண்மையான கடவுளை அவமதித்ததுபோலாகிறது என்றும், நாம் இப்பழக்கத்தை எவ்வளவு சீக்கிரத்தில் விடுகிறோமோ அவ்வளவு சீக்கிரம் நாம் உய்யும் வழியைத் தேடிக்கொண்டவராவோம் என்றும் கூறுகின்றார்கள். வேறு மத பிரசாரத்தில் இதுவே முக்கிய தூஷணையாகவிருக்கிறது. ஆனால் அவர்கள் உண்மையை அறியாததாலேயே இவ்விதம் கூறுகின்றனர். நாம் தொழுவது விக்கிரகத்தையல்ல, விக்கிரகம் குறிக்கும் மெய்ப் பொருளையே.

விக்கிரகம் கடவுளல்ல. அது சாதாரணமான கல்லால், அல்லது உலோகத்தால் செய்யப்பட்ட ஓர் உருவம். மனிதனால் செய்யப்பட்டது. அவனுக்குத் தோன்றியபடி நிருமிக்கப்பட்டது. கோயிலில் ஸ்தாபனம் ஆகும்வரையில்

மிக்க பயனற்றது. நமது கைக்கீழ் அடங்கிய அனேக வஸ்துக்களைப்போல் நாம் இஷ்டப்பட்டால் அதை உயர்த்தலாம், இல்லையேல் தாழ்த்தலாம். கோயிலில் ஸ்தாபனம் ஆகும்வரையில்தான் நமக்கு இத்தகைய சுவதந்திரம். அதற்குப் பிறகு நமக்கும் அதற்கும் வெகு தூரம். முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயம் என்னவென்றால் கோயிலில் ஸ்தாபனம் ஆகும் வரையில் சர்வ சாதாரணமாக விருந்த ஒரு வஸ்து அச்செய்கைக்குப் பிறகு புனிதமாகின்றது, கடவுளைக் குறிக்கின்றது. கும்பாபிஷேகம் ஆகும்வரையில் அதத்கு ஒரு குணம், ஆனபிறகு வேறொரு குணம்.

குழந்தைகள் விளையாடுவதற்குத் தகுதியான மரப் பொம்மைகளை நீங்கள் பார்த்திருப்பீர்கள். ஆண்களைப் போலவும் பெண்களைப்போலவும் செய்யப்பட்டு 'மரப்பாச்சி' என்னும் பெயருடன் வழங்கும் அவைகளைக் குழந்தைகள் கையில் கொடுங்கள். மூன்று அல்லது நான்கு வயதுடைய குழந்தைகள் இந்தச் சாமான்களை உண்மையில் உயிருள்ள குழந்தைகளைப்போல் பாவித்து, தங்கள் பெற்றோர் தங்களுக்குச் செய்யும் சகல சிச்ருஷைகளையும் (எண்ணெய் போடுதல், குளிப்பாட்டல்) அந்த பொம்மைகளுக்குச் செய்கின்றன. அச்சிறுவர்களுக்கும் அவை உயிரற்ற சாமான்களென்று நன்றாகத் தெரியும். ஆயினும் விளையாடும்போது மாத்திரம் அவர்களே அவைகளுக்கு உயிரைக் கொடுத்துத் தங்கள் பொழுது போக்குக்கு ஏற்பாடு செய்கிறார்கள்.

சோழி ஆட்டங்களில் 'தாயக்கட்டம்' என்று ஒரு ஆட்டமுண்டு. பெண்கள் மத்தியானப் பொழுதில் நான்கு பேர் சேர்ந்து ஆடுவது வழக்கம். ஒவ்வொருவரும் 6 காய்கள் வைத்துக்கொண்டு கோடுகள் கீறப்பட்ட இரண்டு கட்டைகளால் ஆடுவார்கள். முதலில் ஒருவர் வைத்த இடத்தில் பின்னால் ஒருவர் வைத்தால் முதல் காய் வெட்டப்படுவதாகக் கற்பனை. அக்காய் மறுபடியும் முதலிலிருந்து ஆரம்பித்து முழுக்கட்டமும் சுற்றவேண்டும். இந்த ஆட்டத்தில் ஒருவருடைய காய்களில் 5 சுற்றிவந்து பழம் ஏறிவிட்டதென்றும் ஆறாவது காய்மட்டும் முக்கால்வாசி சுற்றிவந்திருக்கிறதென்றும் வைத்துக் கொள்வோம். அந்தச் சமயத்தில் அந்தக் கடைசிக்காயை யாராவது வெட்டிவிட்டால் அல்லது வெட்ட யத்தனித்தால் காயின் சொந்தக்காரர் முகம் 'மூன்றும் பேஸ்து' என்று சொல்லப்படுவதைவிடக் கேடாக மாறுகிறது. ஏன்? அவர் காயாகவைத்துக்கொண்டிருப்பது அனேகமாக ஒரு சிறு சோழியோ, புளியங்கொட்டையோ, இராவணன் விழியோ, சீதா சொருக்கோ, மண்ணாங்கட்டியோ...அல்லது இன்னும் இழிந்த வஸ்துவாகவோதான் இருக்கும். எனினும் அந்தச் சமயத்தில் அவருக்குத் தன் உயிரே அந்த வஸ்துவின்பேரில் இருப்பதுபோல் தோன்றும். ஆட்டம் தொடங்குவதற்கு முன்னும் அதற்குப் பின்னும் அதனால் அவருக்கு ஒரு பிரயோஜனமுமில்லை. அந்தச் சமயத்தில் மாத்திரம் அந்த வஸ்து அவ்வளவு உயர்வடைகிறது.

சீட்டாட்டத்தில் என் மனிதர்களுக்கு அவ்வளவு கோபம் உண்டாகிறது? அவர்கள் உபயோகிப்பது சிறு அட்டைத் துண்டுகள்தானே, அதற்காத் தோற்றுவிட்டவர், இரண்டு பிடி வரவேண்டிய இடத்தில் ஒரு பிடி கிடைத்த ஒருவர், சிம்மம்போல் கர்ச்சிப்பானேன்? ஆடத் தெரியாத எனக்கு அவர்கள் செய்வது பயித்தியக்காரத்தனமாகப்படுகிறது. ஆனால் அவர்களோ தங்கள் உயிர் அச்சீட்டுகளில்தான் இருப்பதுபோல் பாவிக்கின்றனர்.

விக்கிரகங்களைப் பழித்துவந்த அரசனொருவனுக்கு புத்தி கற்பிக்க வேண்டும் என்றும் ஒரு சன்னியாசி அரசன் படமொன்றைத் தமது ஆச்சிரமத்தில் மாட்டி அதற்கு மரியாதைகள் செய்ய உத்தேசிப்பதாயும் அரசன் நேரில் வந்து அதைக் கண்டு மகிழவேண்டுமென்றும் கூறி அரசனை வரவேற்றனர். அரசனும் அப்பெரியாருக்கு மரியாதை வைத்து அவர் வேண்டுகோளுக்கிணங்கித் தன் சிப்பந்திகளுடன் அவர் ஆச்சிரமத்திற்கு விஜயம் செய்தான். சன்னியாசி அரசன் வேலையாட்களில் ஒருவனை விளித்து அரசன் படத்தில் எச்சில் துப்பும்படி கூறினர். புத்தியுள்ளவன் எவன்தான் அவ்வாறு செய்யத்துணிவான்?... அதிலும் அரசன் முன்னிலையில்! ஆகவே அவன் மறுத்துவிட்டான். உடனே ஞானி, "ஏன் தயங்குகிறாய்? அது வெறும் படம்தானே? காகிதத்தில், மனிதன் கையால் எழுதிய சித்திரம்! அதற்கு சாதாரணமாகவே ஒரு மதிப்பும் இல்லாதிருக்க அரசன் முன்னிலையில் அது மிகவும் ஈனஸ்திதிதான் பெறும். நீ தாராளமாக எச்சில் துப்பலாம்" என்றார். ஆனால் அவனும், அங்கிருந்த மற்ற எவரும் அவ்விதம்செய்ய முன்வரவில்லை. இதையே ஆதாரமாகக் கொண்ட முனிவர் அரசனை நோக்கி, "பார்த்தாயா, இப்படம் உன்னைக் குறிப்பதால் அதற்கு எவ்வளவு மேன்மை கொடுக்கவேண்டியிருக்கிறது? இதே இடத்தில் வேறு ஏழை எவனுடைய படமாகிலும் இருந்தால் (அது எவ்வளவு அழகான காகிதத்தில் இருந்தாலும், எவ்வளவு கைதேர்ந்த சித்திரம் எழுதுவோனால் வரையப்பட்டிருந்தாலும்) உன்னுடைய ஆட்கள் அதைக் கிழித்தெறியப் பின்வாங்கமாட்டார்கள். அதனால் மரியாதை படத்திற்கல்ல, படம் எழுதியவனுக்கல்ல, படம் யாரைக் குறிக்கிறதோ அவருக்கு என்று ஏற்படுகிறது. அதேபோல் மரியாதை விக்கிரகத்திற்கல்ல, விக்கிரகம் செய்த மனிதனுக்கல்ல, விக்கிரகம் யாரைக் குறிக்கிறதோ அவருக்கு. அற்ப மனிதன், நம்மைப் போன்றவன், இன்றைக்கிருந்து நாளை மாய்பவன்...ஆகிய அரசனுக்கு, அவன் மூலமாக அவன் படத்திற்கு, அவ்வளவு மரியாதை கொடுக்க நாம் தயாராக விருப்போமானால் சர்வ சக்தி வாய்ந்தவர், பரமபிதா வென்று பெயர் படைத்தவர், உலகங்களை ஆக்கவும் அழிக்கவும் கூடியவர்... இப்பேர்ப்பட்ட கடவுளின் சிலைக்கு ஏன் மரியாதை வைக்கக்கூடாது" என்று எடுத்துக்காட்டினர். இம்மொழிகளே அரசன் திருந்துவதற்குப் போதுமாயிருந்தன. ஆனால் நமது ஜனங்களுக்கு இன்னும் அதிகம் கூறவேண்டும்.

"ஆதியிலே வார்த்தை யிருந்தது. அந்த வார்த்தை தேவனுடையதாயிருந்தது. அந்த வார்த்தை தேவனாயிருந்தது" என்ற விதம் யோவான் எழுதிய சுவிசேஷம் ஆரம்பிக்கிறது. வார்த்தை தேவனாயிருந்தால் ஏன் இன்னும் அனேக வஸ்துக்கள் தேவனாயிருக்கக்கூடாது? (அந்தப் புஸ்தகத்தையாவது அதை எழுதியவரையாவது நான் அவமதிப்பதாக எண்ணக்கூடாது.) அவருடைய மொழிகள் எனக்கு அனுகூலமாக விருப்பதால் அவைகளை எடுத்துரைக்கிறேன். 'தேவன்' என்ற பெயரை நாம் யாருக்கு சூட்டுகிறோமோ அவரே தேவராகிறார். 'விக்கினேஸ்வரர்' என்கிறோம், 'கண்ணபிரான்' என்கிறோம் இப்பெயர்களால் நாம் அந்தக் கடவுளைத் தானே யழைக்கிறோம்? விக்கிரகத்தின் முன் நிற்கும்போது நாம் தெய்வ சந்நிதானத்தில் நிற்பதுபோல் எண்ணுகிறோ மன்றிக் கேவலம் ஒரு மனிதனால் செய்யப்பட்ட உருவம் ஒன்றை வணங்குவதாக எண்ணுவதில்லை. ['நான் அப்படி நினைப்பதில்லையே. கோயி

லுக்குப் போவதே பெரியோர் நிர்ப்பந்தித்திஞல். அங்குச் சென்றபோது அந்த விக்கிரகத்தின்மேல் போட்டிருக்கும் பூமாலைகளையும், நகைகளையும், பக்கத்தில் ஏற்றிவைத்திருக்கும் விளக்குகளின் ஜோதியையும்......தான் நான் பார்க்கிறேன்' என்று கூறும் மனிதர்களைப் பற்றி நான் தற்போது பேசவில்லை. அடுத்த கட்டுரை அவர்களுக்காக 'ரிசர்வ்' செய்யப்பட்டிருக்கிறது. அதுவரையில் தயவு செய்து பொறுத்துக்கொள்ளட்டும்.] கோயிலுக்குப் பய பக்தியுடன் செல்பவர்கள் பகவான் முன் செல்பவர்களேபோல் கைகட்டி வாய்புதைத்து, வணக்கத்துடன் நமஸ்கரித்து, இனிய ஸ்தோத்திரங்களைப் பாடி, தங்கள் உடலையே மறந்து, மனத்தை கடவுளிடம் செலுத்துவர். வால்மீகி முனிவர் எழுதிய ஸ்ரீமத் ராமாயணத்தில், சுந்தரகாண்டத்தில், ஆஞ்சநேயர் சீதையிடம் விடைபெறுங் காலையில் அவளை வலம்வந்ததாகக் கூறுகிறார். அப்போது அக்கவி, "ஆஞ்சநேயர் மனம் இராமரிடம் போய்விடவும் சீதையை வலம் வந்தது ஹநுமாரின் தேகந்தான்" என்று அழகாக வர்ணிக்கிறார். உண்மை பக்தி யதுவேயன்றி வெறுமனே "நானும் கோயிலுக்குச் சென்றேன்"... (எங்களகத்துக்காரரும் கச்சேரிக்குப் போகிறார்)...என்று சொல்லுவது அழகல்ல.

பக்தியுடன் நாம் பூஜிப்பது கடவுளை. ஆனால் கடவுள் நேரில் இல்லாததால் நம்மை ஏமாற்றிக்கொள்ளவேண்டியிருக்கிறது. மேல் நாட்டார் ஒருவர் இன்ஷியூரென்ஸைப் பற்றிக் கூறுமிடத்து "மனிதன் மூளை இவ்வளவு பிடிவாதமாயிருப்பதால் தன்நலத்துக்காகப் பணம் சேர்ப்பதற்கும் தன்னை ஏமாற்றிக்கொள்ளவேண்டி யிருக்கிறது," என்றார். ஒவ்வொருவரும் பணம் சேர்த்து அந்திய காலத்துக்கோ அல்லது தாம் இறந்த பிறகு தம் குடும்பத்துக்கோ பயன்படுமாறு செய்வது அவசியம். ஆனால் மனிதர்கள் அவ்விதம் செய்வதில்லை. இரண்டு மாதம் சேர்த்துவைப்பர். மூன்றும் மாதம் எதையாவது நினைத்துக்கொண்டு மொத்தத்தையும் செலவழித்துவிடுவர். ஆதலால் அவர்கள் கைக்கெட்டாத தூரத்தில் அப்பணத்தை வைக்கும்படியாக நிதிகள் ஏற்படுத்தியிருக்கின்றனர். அதேபோல கடவுள் உண்மையில் கண்ணுக்குத் தெரியாவிடினும் அவருக்காகச் செய்த ஒரு சிலையை 'அவர்' என்று கூறி அவருக்கு செய்யவேண்டிய மரியாதைகளை அதற்குச் செய்து கடவுளே உலகில் இருப்பதாக நம்மை ஏமாற்றிக் கொள்ளவேண்டியிருக்கிறது. "கோயிலில் வந்து சத்தியம் செய்வாயா" என்று கேட்கிறார்களே, கடவுள் அவ்விடத்தில் இல்லை என்று அவர்கள் நம்பியிருந்தால், விக்கிரகத்துக்கு மதிப்பில்லை என்று அவர்கள் சிந்தித்தால் ஏன் அவ்விதம் செய்யப்படவேண்டும்? விக்கிரகம் அல்லாத ஒரு வஸ்து, ஆதி அந்தம் இல்லாத ஒரு பராபரவஸ்து அங்கிருப்பதாகவே எல்லோரும் நம்புகிறார்கள்.

"விக்கிரகங்களைப் பூஜிப்பதில் முக்கிய பிழை என்னவென்றால், நாம் இவ்வளவு கொண்டாடும் ஒரு வஸ்து அற்ப ஜந்துக்களாகிய எலி, கரப்பான் பூச்சி...முதலியவைகளால் அவமதிக்கப்படுகிறது," என்று ஒருவர் கூறினர். வெகு நாட்களுக்கு முன்பு ஒரு ஞானி இளம்பிராயத்தில் கோயிலுக்குள் சென்றபொழுது, விக்கிரகத்தின் முன்பு நைவைத்தியத்திற்காக வைக்கப்பட்டிருந்த சில வஸ்துக்களை எலி கடித்துவிட்டதாம். உடனே அவர், "என்ன ஆச்சரியம்! நாமெல்லாம் இவ்வளவு மதித்து, விழுந்து விழுந்து கும்பிடும் விக்கிரகம் இந்த எலியை ஒன்றும் செய்யாமல் இத்தகைய அவமானத்தைப்

பொறுத்திருக்கிறதே, சீ, இந்த விக்கிரகத்தை வணங்குவதே பிழை" என்று தீர்மானித்து அன்று முதல் கோயிலுக்குச் செல்வதை அடியோடு நிறுத்திவிட்டாராம். இவ்வளவு படித்தவர் இந்த அற்ப விஷயத்தை இவ்வளவு பெரிதாகக் கொண்டுவிட்டதுதான் வியக்கத்தக்கது. நாமெல்லோரும் விழுந்து, விழுந்து நமஸ்கரித்து மரியாதை செய்யும் அரசர்கள் போரில் தோல்வியடைந்து அயல் நாட்டாரால் அவமதிக்கப்படுவது கண்டு நாமும் அவர்களை அவமதிக்கிறோமா? அதே அரசர்கள் விடுதலையாகி மறுபடியும் சுயநாட்டிற்கு வந்தால் முன்போல் கௌரவத்துடன் வாழ்வதில்லையா? நமது பிதாவை அன்னியன் ஒருவன் அவமதித்து ஏளனம் செய்தால், "இந்த அற்பனா எனக்குப் பிதா? இவனா நான் முன்னர் அறியவேண்டிய தெய்வம்?..."என்று அன்று முதல் நாம் அவரை அவமதிக்கலாமா? அவர் நமக்குப் பிதாவே யொழிய அன்னியருக்கு 'வேறு யாரோ' தானே. நமக்குத் தெய்வமானால் எலிக்கென்ன வந்தது? எப்படி நமக்குப் பிதாவானவர் மற்றவர்களுக்கு அன்னியராக விருப்பதில் ஒன்றும் அதிசயமில்லையோ அதேபோலே, நாம் தெய்வமாகக் கொண்டாடுவது நம்மைப்போல் நம்பாதவர்களுக்கு ஒன்றுமில்லை யென்பது அதிசயமில்லை.

மேலும் இவ்வளவு நேரம் நான் கூறிக்கொண்டுவந்ததிலிருந்து உண்மைத் தொண்டர்கள் விக்கிரகத்தைத் தெய்வமாகக் கொண்டாடுவதில்லை. கண்ணிற்குத் தென்படாத தெய்வத்தை அறிவதற்கு விக்கிரகத்தை ஒரு கருவியாகக் கொள்கிறாரன்றி வேறில்லை. நாம் தெய்வம் என்று மனத்தில் நினைத்துக்கொண்டாலன்றி அந்தச் சிலை தெய்வமாகப் போவதில்லை. ஒவ்வொரு விஷயமும் இப்படித்தான். நமது கண்ணுக்கு மதிப்புள்ளதாகத் தோன்றும் வஸ்து மற்றவர் கண்களுக்குத் தோன்றாதிருக்கலாம். ஸர். ஐஸக் நியூட்டன் வெகுநாள் பிரயாசைப்பட்டு எழுதிவைத்த ஒரு கட்டுரையை—அவர் மிகவும் மதித்த ஒரு கட்டுரையை, அவர் இல்லாத சமயம் அவருடைய நாய் மையைக் கொட்டிப் பாழ்படுத்திவிட்டது. இதனால் அக்கட்டுரை மதிப்பற்றது என்று நினைக்கலாமா? நியூட்டனுக்கு மதிப்புள்ள வஸ்து அவர் நாயிக்கு வெறும் காகிதமாகத் தோன்றிற்று. ஆயிரம் ரூபாய் நோட்டு வெறும் காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. அதன் விலை தெரியாத ஒரு குழந்தை அதைக் கிழித்து எறிந்துவிட்டால் நோட்டுக்கு மதிப்பில்லை என்று அர்த்தம்? நமது அறிவுக்கு எட்டிய விஷயம் குழந்தைக்கு எட்டவில்லை. அவ்வளவுதான். ஆகவே நாம் தெய்வமாகக் கொண்டாடுவதை எலியும் பூனையும் கொண்டாடுவதில்லை என்று குறையாகக் கொள்ளலாமோ? அறிவிலிகள் செய்கையைக் கண்டு அறிவாளிகள் மனதை மாற்றலாமோ?

நல்லது, விக்கிரகமே தெய்வம் என்று வைத்துக்கொள்வோம். அந்தத் தெய்வத்திற்கு ஒரு தீங்கு செய்ததாகவே நினைப்போம். அந்தத் தீங்கிழைத் தவருக்கு உடனே அவஸ்தை ஏற்பட்டுவிடுகிறதா? 'அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும்' என்ற வசனம் வழங்கவில்லையா? குற்றம் செய்தவர்கள் தலையில் உடனே இடிவிழுந்துவிடுகிறதா? பொய் சொல்லுவது, பெண்களின் கற்பழிப்பது, களவு செய்வது...இன்னும் எத்தனையோ குற்றங்கள் செய்தவர்கள் அகப்பட்டுக்கொள்வதில்லை. அவ்விதம் அகப்பட்டுக்கொண்டாலும் அரசாங்கத்தாரால் விதிக்கப்படும் சொற்ப தண்டனை அடைந்துவிட்டால் சரியாகிவிடுமா? அனேக இடங்களில் தெய்வத்திற்குத் தீங்கிழைத்தவர்கள் (அதாவது, தெய்விக விஷயங்களில் பிழை செய்தவர்கள்) சந்தோஷமடைந்து

மேன்மேலும் விருத்தியடைவதைக் கண்கூடாகக் காண்கிருேம். எனக்குத் தெரிந்த ஒருவர் அவரையே நம்பியிருந்த ஒரு பெண் பிள்ளையை ஏமாற்றி லக்ஷ ரூபாய் பெறுமானமுள்ள சொத்துக்களை அபகரித்துச் சொந்தத்தில் ஒரு பெரிய மாளிகை கட்டிக்கொண்டு இன்றுவரையில் சுகமாக வாழ்கிருர். இதனுல் தெய்வம் இல்லை என்று கூறிவிடலாமா?

விக்கிரகத்திற்கு மதிப்பில்லை, சுய உணர்ச்சியில்லை என்று கூறுவதற்கு எலி ஏறிய அத்தாக்ஷியே வேண்டாம். சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு முன் முகம்மது கஜினி என்பவர் 16 அடி உயரமுள்ள ஸோமநாத் விக்கிரகத்தை உடைத்துவிட்டாரே, அவருக்குத் தெய்வம் (உடைபட்ட விக்கிரகம்) ஒரு தண்டனையும் விதிக்கவில்லையே, அதையே ஆதாரமாகக் கொள்ளலாம். இதை விடச் சிறந்த அத்தாக்ஷி வேண்டியதில்லை. எனினும் ஆயிரம் வருஷங்களாக இந்திய மக்கள், ஹிந்து மதஸ்தர், இச்சம்பவத்தை மதிக்காது விக்கிரகங்களைப் பூஜித்துவருகின்றனர். கடவுள் கிருபையால் இன்னமும் பூஜித்துவருவர் என்று எண்ணுகிறேன்.

எல்லா விஷயங்களுக்கும் நமது மனமே காரணம். நம்மை இன்ப துன்பத்துறைகளில் செலுத்துவது மனம்தான். அந்த மனம் எதை யாவது நம்பினுல் அதுவே நமக்குப் பிரதானமாகிறது. நமது தேகம் அசௌக்கியமாயிருக்கிறது என்ற எண்ணம் நமக்கு உதித்துவிட்டால் எவ்வளவு பேர் வந்து நமக்கு ஒன்றும் வியாதியில்லை யென்று கூறினுலும் நாம் சாந்தமடையாமல் வைத்தியனிடம் சென்று காண்பிப்போம். சில வருஷங்களுக்கு முன் ஒருவர் அடிக்கடி என்னைச் சந்திப்பது வழக்கம். அவருக்கு ரெயில் ஸ்டேஷன்களில் இருக்கும் வாராவதிகளில் (over bridge) ஏறுவதற்குப் பயம். ஒருமுறை அவர் பராக்காக விருக்கும்பொழுது ஒரு வாராவதியின் மேல் பாதி தூரம் அழைத்துச் சென்றுவிட்டேன். திடீரென்று அவர் தம் நிலைமையை உணர்ந்து கொண்டார். பயந்து, நடுநடுங்கி முன்னுகிலும் பின்னுகிலும் ஒரு அடியும் எடுத்துவைக்க மறுத்து அங்கேயே உட்கார்ந்து கொண்டார். அவர் மனம் நிலையில் இல்லாதவரையில் எல்லாம் சரியாக நடந்தது, மனம் சுய நிலையையடைந்தவுடன் பீதியுண்டாயிற்று. ஆகவே நமது மனம் துரும்பையும் தூணாக்கும், தூணையும் துரும்பாக்கும் என்று விளங்கவில்லையா?

அந்த மனத்தில் ஒரு நம்பிக்கை தோன்றிவிட்டால் அதுவே பிரதானமாகிறது. விக்கிரகம் கடவுளைக் குறிக்கிறது என்று நாம் நம்பாவிடில் அந்த விக்கிரகத்தில் ஒன்றும் இல்லை. முன் கட்டுரையில் கூறியபடி, விக்கிரகத்திற்கும் கடவுளுக்கும் சம்பந்தம் உண்டாவென்பதை ரூபிக்கமுடியாது. விக்கிரகங்களைப் பூஜித்தவர் சுவர்க்கத்திற்குச் செல்கிருர்களா அல்லது நரகத்தில் அழுந்திக்கிடக்கிருர்களா என்று பார்த்துக்கொண்டுவந்து சொல்லுகிறவர்கள் ஒருவரும் இல்லை. ஆதலால் நம்முடைய மனத்திற்கு எது யுக்தமென்று தோன்றுகிறதோ அதையே செய்வதுதான் மேலானது. நமது மனம் ஒப்புக்கொள்ளாத விஷயங்களைச் செய்வதில் பிரயோஜனமில்லை. மனப்பூர்வமாக விக்கிரகமே தெய்வத்தின் அறிகுறி என்று நம்பி ஆராதனைகள் செய்துவந்தால் அப்பூஜை தெய்வத்திற்கு ஏற்கும்.

வயதுவந்தவர்களும் சில விஷயங்களில் குழந்தைகளைப் போலிருக்க

வேண்டியிருக்கிறது. இரண்டு மனைவிகள் இறந்துவிட்டால் மூன்றாம் மனைவியை விவாகம் செய்துகொள்ள விரும்புவோர் முதலில் ஒரு வாழை மரத்திற்குத் தாலி கட்டி அதை வெட்டிவிட்டு பிறகே விவாகச் சடங்குகள் ஆரம்பிக்கவேண்டும். ஒரு ஊரில் மழை பொழியாவிட்டால் தவளை யொன்றைக் கொன்று அதை வீடுவீடாக எடுத்துச் சென்று "ஐயா, தண்ணீரில்லாமல் இத்தவளை இறந்துவிட்டது, கொஞ்சம் நீர் கொடுங்கள்" என்று கேட்பார்கள். பாம்புகளில் ஒருவிதம் கடித்துவிட்டால் கடிபட்ட மனிதன் இறந்துவிட்டானா, அவனைக் கொளுத்துகிறார்களா என்று அறிய அந்தப் பாம்பு சுடுகாட்டுக்குச் செல்லுமாம். அந்த மனிதன் பிழைக்கவேண்டும் என்ற விருப்பமுள்ளவர்கள் அந்தக் காட்டுக்குச் சென்று வழக்கமாகப் பிணங்களை எரிக்கும் இடத்தில் ஒரு கட்டையைக் கொளுத்துவார்கள். அப்பொழுது அந்தப் பாம்பும் சாந்தமடையும், விஷமும் இறங்கிவிடும்... இதுபோன்ற இன்னும் அனேக விஷயங்கள் இன்றும் நடைபெறுகின்றன. ஒருவரை யொருவர் ஏமாற்றிக் கொள்வதும் வானத்தையும் கடவுளையும் மனமிரங்கச் செய்யும் விதங்களும் மனித இயற்கை. ஒரு வீட்டில் யாராவது இறந்துவிட்டால், அவர்கள் முக்கியமானவர்களல்ல வென்றாலும், அவர் இறந்ததில் அவ்வீட்டாருக்குச் சந்தோஷமே யென்றாலும், வாய்விட்டு அழாவிட்டால் யமன் கோபமடைந்து அவர்களுக்குப் பிரியமான வேறொருவரைக் கொண்டுபோய் விடுவான் என்று ஒரு நம்பிக்கையிருப்பதால் அவனை (யமனை) ஏமாற்றுவதற்காக வீண் ஓப்பாரிபாடுவதும் நம் நாட்டு மக்கள் அனேகருடைய இயற்கை. (நாகரிக மக்கள் மன்னிக்கவேண்டும். அவர்கள் நீங்கலாக மற்றவர்களைக் குறிக்கிறேன்.) இவ்விதம் எல்லாம் செய்வது வீண் கொழுப்புக்காகவா? சற்றேனுமில்லை. அவர்கள் அவ்விதமெல்லாம் செய்யாவிடில் விபத்து நேரிடும் என்று நம்புவதால்தான். பக்தியின் விசேஷத்தைக் குறிக்குமிடத்தில் இதைப் பற்றி இரண்டொரு வார்த்தைகள் கூறவேண்டிவரும் என்பதால் இத்துடன் இதைவிட்டு மேல் செல்லுவோம்.

கடவுள் விஷயத்தில் 'ஏமாற்றுவது' என்பது குற்றமாகாது. தற்கால சட்டத்தின்படி ஒவ்வொரு குற்றத்திற்கும் உத்தேசம் தான் (Mens rea) முக்கிய அம்சம். ஒருவன் மேல் கொலைக் குற்றம் சாட்டப்பட்டு அவன்தான் கொலை செய்தான் என்பது ருசுவாகிவிட்டால் அவன் வேண்டுமென்று கொலை செய்திருந்தால் அவனுக்கு அதிக தண்டனை விதிக்கவேண்டும், காயம் படுத்த உத்தேசித்திருந்து அச்செய்கையில் படுகாயம் ஏற்பட்டு மரணம் சம்பவித்தால் குறைந்த தண்டனையும், சற்றும் எதிர்பாராத விதத்தில் அவன் கொலை செய்யப்பட்டிருந்தால் கொலை செய்தவனுக்கு தண்டனையே விதிப்பதில்லை. ஆகவே திருட்டுக் குற்றத்திற்கும், ஏமாற்றிய குற்றத்திற்கும், மற்றுமுள்ள எல்லாக் குற்றங்களுக்கும் உத்தேசம்தான் முக்கியம். ஏமாற்றிய குற்றத்தில் எதற்காக ஏமாற்றவேண்டும் என்பது முக்கியமான கேள்வி. சுய நலத்திற்கா, இன்னொருவரை வஞ்சிப்பதற்கா, அல்லது வேறு என்ன காரணத்திற்கு என்பது ஏற்படவேண்டும். தெய்விக விஷயத்தில் நாம் இத்தகைய குற்றத்தைச் செய்வதே இல்லை. திருடர்களும் துரோகிகளும் தாம் செய்வது குற்றமென்று நன்றாயறிகிறார்கள். ஆனால் நாம், செய்வது நியாயம் என்றும் கடவுளை பூஜிக்கிறோம் என்னும் நோக்கத்துடனும் விக்கிரகங்களை ஆராதிக்கிறோம்.

ஆதலால் விக்கிரகங்களை பூஜிப்பதில் நமக்கு உண்மைக் கடவுளை அவமதிக்கவேண்டும் என்ற எண்ணமில்லை. உண்மைக் கடவுளை நேரில் காண முடியாததாலாலும், பெரும்பான்மையோர் கடவுளை நேரில் காணுதவரையில் அவரை வழிபடாராதலாலும், கடவுளுக்குப் பிரதியாக வேறொன்றை நியமித்து அதுவே கடவுள் என்று சொல்லவேண்டியிருக்கிறது. மக்களில் பெரும்பான்மையோர் மத விஷயங்களில் குழந்தைப் பருவத்தை விட்டகலவில்லை. அவ்வயதுவந்த குழந்தைகளுக்கு மத போதனை செய்யும்பொருட்டு இம்மாதிரி ஒரு யுக்தி செய்யவேண்டியது அவசியம். வெகு தூரத்திலிருக்கும் மன்னரை ஜனங்கள் காண முடியாததால் ராஜப்பிரதிநிதி யொருவரை நியமித்தல் அவசியமாயிருக்கிறது. அதேபோல தெய்வத்தை யாவரும் காண முடியாததலால் அவரைக் குறிக்க ஒரு சிலை வேண்டியிருக்கிறது. மத விஷயங்களில் 'அக்கரை' கொண்டோர்களுக்காக இவ்வழக்கம் ஏற்படுத்தப்படவில்லை. பாமர ஜனங்கள்—தங்கள் மனத்தைச் செவ்வைப்படுத்த வகையற்ற ஜனங்கள் தெய்வ பக்தி பெறுவதற்காகவே ஏற்படுத்தப்பட்டது.

இவ்வழக்கம் நமக்கு மாத்திரமல்ல. வெகு காலத்துக்கு முன் யூதர்களை ஒன்று திரட்டி கடவுள், "இனி நானே உங்களை ஆண்டுவருவேன், வேறு அரசன் உங்களுக்கு வேண்டியதில்லை. உங்களுக்கு வேண்டியதை என்னிடமிருந்து பெற்றுக்கொள்ளுங்கள்" என்றார். சில தலைமுறைகள் இவ்விதம் நடந்துவந்தது. ஆனால் பொது ஜனங்களுக்கு இது சற்றும் பிடிக்கவில்லை. ஒருநாள் அவர்கள் ஸாமுவேல் என்னும் தீர்க்கதரிசியை முன்னிட்டுக்கொண்டு கடவுளுக்கு ஒரு மனுச் செய்தார்கள். "நாங்கள் கண்ணால் பார்க்கும்படியான ஓரரசன் எங்களுக்கு வேண்டும். கண் மறைவாக விருக்கும் நீர் போதாது" என்றார்கள். ஆதலால் மக்கள் கண்கூடாகப் பார்க்கக்கூடிய விஷயங்களையே விரும்புகின்றனர். கிறிஸ்தவர்களில் பெரும்பான்மையோரான ரோமன் கத்தோலியர் தங்கள் கோயிலில் விக்கிரகங்களை வைத்திருக்கின்றனர். மற்றையோரும் மத சம்பந்தமான விஷயங்களைக் குறிக்கும் படங்களை மேன்மையாக வைத்துக்கொண்டிருக்கின்றனர். பிரசாரங்கள் நடக்கும் இடங்களிலும் இப்படங்கள் காண்பிக்கப்படுகின்றன.

பிரபல அமெரிக்க பாதிரி யொருவர் மஹாத்மா காந்தியைப் பற்றிக் கூறுமிடத்து, "அவருக்கும் இயேசுவுக்கும் அதிக வித்தியாசமில்லை. மஹாத்மா கிறிஸ்தவரல்ல, மாதா கோயிலுக்குச் செல்வதில்லை என்ற குறைகளிரண்டும் இயேசுவினிடமும் இருந்தன," என்றார். இயேசு மாதா கோயிலுக்குச் சென்றதில்லை, கிறிஸ்தவர் என்ற பெயர்பெற்றதில்லை. மற்ற யூதர்களைப் போல் அவரும் ஒரு யூதரே. யூதர்கள் செய்த அநேக காரியங்களை அவரும் செய்திருப்பர். ஆனால் அவரைப் பின்பற்றும் ஜனங்கள் இதையெல்லாம் மறந்துவிடுகின்றனர் போலும்! தாம் தற்போது நடிப்பதுபோல்தான் என்றென்றும் நடந்திருக்கும் என்று எண்ணுகின்றனர்போலும்! அனேக பிரசாரகர், "அப்பனே! நீ இயேசுவை நம்பு. சுகமடைவாய். உன்பாவங்கள் மன்னிக்கப்படும்" என்கிறார்கள். இயேசு யாரிடத்தில் நம்பிக்கை வைத்தார்? அந்தக் கடவுளிடத்தில் நாமும் நம்பிக்கைவைத்தால் நாம் உய்யமாட்டோமா? கிறிஸ்தவர்களாக மாறிவிட்டவர் குற்றங்கள் செய்வதில்லையா? 1914-ம் வருஷத்தில் ஆரம்பித்த மஹா யுத்தத்தில் சண்டையிட்டவர் பெரும்பான்மையோர் கிறிஸ்து மதஸ்தரே. கிறிஸ்து போதித்த முக்கிய நீதி பழிக்குப் பழி

வாங்காமையும் அன்னியர்களை நம்மவர்களைப்போல் நேசிப்பதுமே. அவ் விரண்டும் செய்யாதவர் ஞானஸ்நானம் பெற்றதனுலும் மாதா கோயிலுக்குச் செல்வதனுலும் அம்மஹானைப் பின்பற்றியவராகமாட்டார்கள். தங்களால் இயன்ற வரையில் தீமைகளை விலக்கி நன்மை செய்பவரே உண்மை பக்தர் கள், உண்மைக் கிறிஸ்தவர்கள்.

மனிதனின் முக்கிய குறை என்னவென்ருல் தங்களுக்கு இஷ்டமான விதமெல்லாம் கடவுள் நடக்கவேண்டும் என்று இஷ்டப்படுவதுதான். ஒரு வன் தனக்கு ஆயிரம் ரூபாய் லாபம் வரும் என்று எதிர்பார்க்கிருன். கடவு ளைக் குறித்து ஸ்தோத்திரம் செய்கிருன். லாபம் வந்தால் கடவுள் நல்லவர், இல்லையேல் கடவுள் இல்லை, கடவுளுக்குக் கண்ணில்லை என்ற பழிகளை அவர் ஏற்றுக்கொள்ளவேண்டும். எலி விக்கிரகத்தின்மேல் ஏறுகிறது. மனிதன் அந்த எலி உடனே இறந்து விழவேண்டும் என்று எதிர்பார்க்கிருன். எலி இறப்பதில்லை. சரி, கடவுளுக்கு வல்லமையில்லை, விக்கிரகம் கடவுளைக் குறிப்பதில்லை என்ற முடிவுக்குவருகிருன். இது நியாயமாகுமா?

'கடவுள் எங்கும் இருக்கிருர்' என்று சொல்லாதவர்கள் இல்லை. அவர் துரும்பிலும் இருக்கிருர் தூணிலும் இருக்கிருர் என்று நாமும் நம்புகிருேம். ஆனல் யாராவது கடவுள் உணவில் இருந்தால் நாம் உண்டுவிட்ட பின் வயிற் றுக்குள் சென்றுவிடுகிருர் என்ருவது, அசுத்தமான இடங்களில் கடவுள் இருப்பார் என்ருவது எதிர்பார்க்கிருேமா? அவர் எங்கும் இருக்கிருரென்ரு லும் அவரைத் தொழுவதற்கான புனிதமான இடங்களிலேதான் அவர் இருப் பதாகப் பாவிக்கிருேம். மற்ற இடங்களிலே அவர் இல்லைபோலப் பாவித்து நமது மனம்போனபடியெல்லாம் நடந்துகொள்கிருேம். இதை ஒருவரும் குற்றமாகக் கொள்வதில்லை. ஆனல் அந்த புனிதமான இடம் முழுவதிலும் கூட கடவுள் இருப்பதாக எண்ணுவதில்லை. ஏனெனில் அனேகர் கோயில் களில், மசூதிகளில், மாதா கோயில்களில கடவுள் சம்பந்தமில்லாத விஷயங் களைப் பற்றி பேசுகிருர்கள். எத்தனை விவாகங்கள் சர்ச்சுகளில் ஏற்பாடாக வில்லை. ஆடவரும் பெண்டிரும் முதன் முதல் சந்திப்பது அனேகமாக அங்குதான். ஹிந்துக்களில் அனேகர் கோயில்களில் தான் தங்கள் வீட்டு விஷயங்களைப் பேசுவது. ஆகவே கடவுளுக்கு என்று விடப்பட்டது கோயி லிலும் ஒரு மூலையில்தான். அதாவது அந்த விக்கிரக சந்நிதியில்தான் பொது ஜனங்கள் தங்கள் கவலைகளைவிட்டு கடவுளைத் தியானிக்கின்றனர்.

(தொடரும்.)



**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நெம்பர் தெரியாத வர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த் துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிருேம்.

# சமய தத்துவ வாத முடிவு.






# சசிவன்னன்.



(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

---

### மங்கலம்

சந்திரன் சூரியன் அக்கினி நீர் காற்று ஆகாயம் பூமி ஆன்மா என்னும் எட்டின் வடிவமாயும், எல்லாவற்றிற்கும் இறையாயும், எல்லாமாயும், எல்லா மல்லாததாயும், அறிவுருவமாகவுமுள்ள பரம்பொருளை மனதின்கண்வைத்து தியானிப்போமாக.

### நூல்

முன்னொரு காலத்தில் பாகவெக்கியன் என்பானொரு வேதியன் விரதசீலை என்னும் மனையாளுடன் வாழ்ந்து வருங்காலத்தில் அவர்களுக்கு ஓர் புதல்வன் பிறந்தான். அவன் வயதில் வளர வளர சகல துர்க்குணங்களும் அவனுடன் வளர வாரம்பித்தன. அவன் தீவினைகளெல்லாவற்றிற்கும் இவனே இருப்பிடமென்னுமாறிருந்தான். அவன் செய்யாத கொலையும் களவும் வஞ்சனையும் உலகத்திலில்லை. பேசுவதெல்லாம் பொய்யே யொழிய மெய்யென்ப தன் பெயரையும் அவனறியான். விபசாரத்திற் றலை சிறந்து விளங்கினன். பாவிகளனைவருள்ளும் பெரும்பாவி யிவனே. இவனுடைய பெயரைக் கூறுவோரது குலமும் எரிவாய் நரகை யெய்து மென்னுமாறு ஒழுகினன். இவன் செய்து வந்த தீவினையின் வன்மையானது சொர்க்கத்தில் வசித்து வந்த அவனுடைய பிதிரரையும் நரகத்தில் சேர்த்து விட்டதென்றால் இவன் செய்த பாவகாரியத்தை விவரித்துக் கூறுதல் எப்படிச் சாத்தியமாகும்!

ஒரு பிறவியின் கண் ஒருவன் செய்துவரும் புண்ணிய காரியமும் பாவ காரியமும் மறு பிறவியின் கண்ணே அவனுக்குப் பயன் தரும் எனக் கூறுவர். அது சரியே யாயினும் முற்றிலும் சரியல்ல. ஒருவன் செய்யும் புண்ணியமோ பாவமோ அதிகரித்து விடுமாயின் அவை அப்பிறவியிலேதானே தம் பயனாகிய இன்பத்தையோ துன்பத்தையோ தந்துவிடும் என்பது உண்மை.

இப்பவ மதனிலீட்டும் இருவினை பயனளித்தல்
எப்பவத் தென்னுமைய மிதயமே எண்ணல்நன்றே?

ஒப்புற விதைதெளித்தா லுடன்பல னளித்தல்போல
இப்பவ மீட்டுபாவ மிம்மையே யளிக்கு மன்றே.

என்னு மான்றோர் வாக்குப் பொய்யாமோ? அவன் செய்து வந்த பாவகிருத்தி யங்கள் அளவு கடந்து விட்டமையின் அத்தீவினைகள் அப்போதே பயனைக் கொடுக்கத் தொடங்கி விட்டன. உலகத்தில் எத்தனை வகைப்பட்ட வியாதிக ளுண்டோ அத்தனையும் அவனைச் சூழ்ந்துகொண்டு வாட்டத் தொடங்கி விட் டன. அவனுடல் முழுதும் வெண்குட்ட நோயால் வெள்ளை வெளேரென சந்திரனுடைய நிறம்போல் வெளுத்து விட்டது. அதனால் அவனை யாவரும் சசிவன்னன் (சசி=சந்திரன்; வன்னன்=நிறத்தை யுடையவன்) எனப் பெய ரிட் டழைக்கலாயினர்.

தன் மைந்தனது துன்பத்தைக்கண்ட பாக எக்கியன் மனங் கலங்கி னன். தன் மகனுடைய பிணிகளெல்லாம் நீங்கி அவன் குணமடைய வேண் டுமே எனப் பெருங் கவலைகொண்டு படாத பாடெல்லாம் பட்டான். அவ னைத் தோளின்மேற் சுமந்துகொண்டு ஊரூராய்த் திரிந்து ஆங்காங்குள்ள மருத்துவரிட மெல்லாங்காட்டி சிகிச்சை செய்வித்தான். எதனாலும் அவன் நோய்கள் நீங்கவேயில்லை. பித்திரவாஞ்சையால் அவன் மனம் நொந்து வருந்தி எவ்விதத்தால் என்மகன் நோய் நீங்கிச் சுகப்படுவான் எனப் பெரி தும் ஏக்க முற்றான். "பிராரத்த வினையின் பயனை அனுபவித்தே யொழிக்க வேண்டும். அனுபவியாமல் ஒழியாது. நீரேன் வீணாகக் கஷ்டப்படுகின்றீர்" என்று பலரும் சொல்லுவர். பாக வெக்கியனும் இவ்வுண்மையை யுணர்ந்த வனே யாயினும், மகன் மேலுள்ள ஆசையால் அவனைத் தூக்கிக்கொண்டு எங் குந் திரிந்துகொண்டே யிருந்தான்.

### ஓர் முனிவன் பிணிபோக்கு முபாயம் கூறல்

பாகவெக்கியன் தன் மகனாகிய சசிவன்னனைத் தலைமேல் சுமந்து கொண்டு அவன் வியாதியைப் போக்கும் வழி எங்கேனும் கிட்டாதோ வெனத் திரிந்துகொண்டிருக்கையில், பாகவெக்கியன் படுந் துன்பத்தைக் கண்ட வோர் முனிவன் அவனை நோக்கி "ஐயா! நான் சொல்வதைக் கேளும். உன் மைந்தனுக்குற்ற பிணிமணி மந்திர ஔஷதங்களால் நீங்கா. ஒரே யொரு உபாயம் இருக்கின்றது. அதனால்தான் இவை நீங்கும். அது யா தெனில்:—நீக்கமற எங்கும் நிறைந்துள்ள பரப்பிரஹ்மத்தின் சொரூபத்தை உள்ளவா றுணர்ந்து, அவ்வடிவாகவே விளங்கும் ஞானிகளின் கிருபாகடா க்ஷமே (அருள் நோக்கே) இக்கொடிய நோய்களைப் பரிகரிக்கத்தக்க ஔஷத மாகும்," எனக் கூறினான். அது கேட்ட பாகவெக்கியன் அம்முனிவனை வணங்கி "சுவாமி! பரப்பிரஹ்ம சொரூபராய் விளங்கும் பரமஞானி எங்கிருக் கின்றனரோ? எனக்குத் தெரிவித்துக் கிருதார்த்தனாக்குதல் வேண்டும்" என வேண்டி நின்றான். அம்முனிவன் அதற்கு விடையாக "சத்தீச்சுரம் என்னும் க்ஷேத்திரத்தில் தன்னை யடுத்தவர்க்கு அருள் செய்யும் பொருட்டு எழுந்தருளி யிருக்கும் மாநந்திபராயணர் என்னும் திருநாமத்தையுடைய பரம ஞானியே உன் புத்திரனுக் குண்டாயிருக்கும் நோய்களுக்குச் சிறந்த மருந் தாவர்" எனக் கூறிச் சென்றார்.

## பாகவெக்கியன் ஞானியை அடைதல்

அம்முனிவன் மொழியைக் குருமொழி யெனக்கொண்ட பாக வெக்கியனென்னு மவ் வந்தணன், சசிவன்னனைத் தூக்கிக்கொண்டு நடந்தான். தன் கஷ்டத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல், எப்படியாவது தன் மகன் குண மடைய வேண்டுமே என்னுமாசை அவனை இழுத்துச் செல்ல, நாள் பல நடந்து சத்தீச்சுர மடைந்து, சுவாமிகளிருக்கு மிடத்தை யடைந்தான். அவரது சன்னிதானத்தில் சசிவன்னனை நிறுத்தினான். அவரடிகளில் விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து எழுந்து நின்று, "சுவாமி! எம்பெருமானே! இவன் என் மகன். இக்கொடியோன் செய்த தீவினைகள் எண்ண முடியாதன. அவற்றை நினைக்கவும் உள்ளம் திடுக்கிடுகின்றது; நாவும் நடுங்குகின்றது. அவை தங்கள் சமூகத்தில் எடுத்துரைக்கத் தகாதன. அத்தகைய பாவச் செயல்களைப் பயமின்றிச் செய்து வந்ததன் பயனாக இக்கொடிய வியாதிகளால் பீடிக்கப்பட்டு வருந்துகின்றான். ஆண்டவரே! இவற்றைப் போக்கிக் காப்பாற்றி யருளவேணடும்" என முறையிட்டு நின்றான்.

## முனிவ ரருள் நோக்கால் தீவினை தொலைதல்

பரிசுத்த மூர்த்தியாகிய மாநந்தி பராயணர் அவன் முறையைக் கேட்டும் சசிவன்னன் நிலையைக்கண்டும் மனமிரங்கி, அவனுடைய வினைகளெல்லாம் நீங்கும்படி தமது சுவானுபூதியினால் விளங்கும் கிருபா நோக்கத்தினாலே சசிவன்னனை ஒருமுறை பார்த்தார். அவ்வளவில் அவனது நோய்களும் அவற்றிற்குக் காரணமான தீவினைகளும் சூரியன் நோக்கால் அந்தகாரம் ஒழிவதுபோல ஒழிந்தன.

## தந்தை மைந்தனை விட்டேகல்

மாநந்திபராயண முனிவரது மகிமையைக்கண்ட பாகவெக்கியன் சகல கலைகளையும் கற்றுணர்ந்தவனாகலின் சசிவன்னனைத் தன்னுடனழைத்துப் போகவேண்டுமென் றெண்ணாமல், அப்புத்திரன், முனிவரது அநுக்கிரகத்தைப் பெற்று ஆத்மலாபத்தை யடைந்து உய்யவேண்டும் என்னும் உயர்ந்த நோக்கங்கொண்டவனாய் "சசிவன்ன! பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றதன் பயன் இனிப் பிறவாநெறியை யறிதலேயாம். ஆத்மஞானத்தைப் பெற்றாலன்றி பவக்கடல் தொலையாது. ஆத்மஞானத்தை யடைதற்குச் சிறந்த உபாயம் குருசேவையே. கடவுள் வழி பாட்டினும் ஆசாரிய வழிபாடே சிறந்தது.

> காவிலாதபே ரன்பினுக் கெளிவரும் கருணைக்
> குரவனாரு ளன்றியிக் கொடியவெம் பாசம்
> புரையில் கேள்வியால் கடப்பது புணையினா லன்றி
> உரவு நீர்க்கடல் கரங்கொடு நீந்துவ தொக்கும்.

என்பர் பெரியோர். ஆகையால் நீ இக் குருநாதருக்குத் தொண்டு பூண்டு வழிபாடு செய்து கொண்டிரு; உய்வாய்," எனக் கூறி, அந்த நல்ல பிதாவாகிய பாகவெக்கியன் சசிவன்னனை அங்கேதானே விட்டுத் தன திருப்பிடம் சேர்ந்தான்.

### சசிவன்னன் தொண்டின் சிறப்பு

ஆசாரியரை யடைந்த சசிவன்னன் அவரை மனிதரென மதியாமல் மானிடசட்டை சாத்திவந்த பரம்பொருளாகவே மதித்து வழிபட்டு வந்தான். அவரேவிய கட்டளைகளை மனக்களிப்போடு அக்கணமே செய்து வருவான். சில காரியங்களை அவர் கூறு முன்னமே குறிப்பறிந்து செய்வான். அவருடலுக்குற்ற குற்றேவல்களை வேளையறிந்து குறைவறச் செய்து முடிப்பான். சில நாட்களுக்குள் இவனது தொண்டின் சிறப்பைக் கண்டோரனைவரும் ஆசாரியரின் திருமேனிக்குரியவ னிவனேயாம் எனக் கொண்டாடி வந்தனர்.

### குரு சேவை பலன்

சசி வன்னன் இவ்வாறு ஆசாரிய ரகமகிழும்படி திருத்தொண்டு செய்து வந்ததனால், பலவகைப்பட்ட பிறவிகளை யொழித்துப் பேரின்பாகாரமாய் விளங்கும் வீட்டையடைய விரும்பும் உத்தமர்களுக்கு இருக்கவேண்டிய விவாகம், இகாமுத்திரார்த்த பலபோக விராகம், சமாதிசட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் என்னும் சாதனங்கள் நான்கும் உண்டாயின.

(1) ('ஆன்மா ஒன்றே நித்தியம்; அதற்கன்னியமாயுள்ள வனைத்தும் அநித்தியம்' என்று விசாரணையின் வாயிலாக வுணர்தல் நித்தியா நித்திய விவேகமென்னும் முதற்சாதனமாம்.

(2) 'இவ்வுலகத்தும் மறுவுலகத்தும் அடைதற் பாலனவாகிய வனிதாதி போகங்கள் துன்பவேதுவா மென்றுணர்ந்து அவற்றினிடத்து விருப்பங் கொள்ளாதிருத்தல்' இகாமுத்திரார்த்த பலபோக விராகம் என்னும் இரண்டாஞ் சாதனமாம்.

(3) 'சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என்னும் ஆறின் அடைவு' சமாதி சட்க சம்பத்தி என்னும் மூன்றுஞ் சாதனமாம். இவற்றுள்.

(அ) சமம்=அகக்கரணங்களாகிய மனம் முதலியவற்றை யடக்குதல்.

(ஆ) தமம்=புறக்கரணங்களாகிய செவி முதலியவற்றைத் தத்தம் புலன்களி லோடாதபடி தடுத்தல்.

(இ) விடல்=சர்வகர்மங்களையும் விடுதல்.

(ஈ) சகித்தல்=சுகம் துக்கம்; சீதம் உஷ்ணம் முதலியவற்றைப் பொறுத்தல்.

(உ) சமாதானம்=சித்தத்தின் ஒருமை.

(ஊ) சிரத்தை=குருவாகிய வேதாந்த வாக்கியங்களில் விசுவாசம்.

(4) முமுட்சுத்துவம்=மோட்சத்தை யடைதல் வேண்டுமென்னும் தீவிர விருப்பம்.)

### சசிவன்னன் குருவைப் பிறவியை யொழிக்கும் உபாயம் கேட்டல்

இவ்வாறு சாதனங்கள் நான்கும் பொருந்திய சசிவன்னன், பிறவிக்குப் பயந்து அதனை யொழிக்கும் வழியை யடைதல் வேண்டும் என்னும் விருப்பம் மிகுந்தவனாய் மாநந்தி பாராயணரை யணுகி வலம் வந்து பணிந்து கண்

ணீர் பெருக எதிரில் நின்ருன். அதைக்கண்ட சர்வஞ்ஞராகிய மாநந்தி பாராயண முனிவர் அவனுள்ளக் கருத்தை யறிந்தும் ஒன்று மறியாதவர் போல அவனை நோக்கி, "அப்பா! உனக்குள்ள குறை யாது? கூறுதி" என வினவினர். அவ்வளவில் சசிவன்னன், "எனது சகல தீவினைகளையும் ஒழித்துக் காத்த கருணையங் கடலே! மிகக்கொடிதாகிய பிறவிக்கடலுள் விழுந்து தவிக்கும் யான், அதனைக்கடந்து கரையேறுதற்குரிய நெறிகாணு தலைகின்றேன். தாங்கள்தான் கிருபைகூர்ந்து அந்நெறியைக் காட்டியருளல் வேண்டும்" என விண்ணப்பித்து நின்ருன். அதனைச் செவியுற்ற முனிவர் பெருமான் மாணவனுள்ளத்திற் கொண்டுள்ள எண்ணம் (பிறவிப் பயம்) உறுதிப்படுமாறு பிறவிக்கடலின் தன்மையைக் கூறுவாராயினர்.

## பிறவிக்கடலின் வருணனை

உத்தம மாணவக! நீ பிறவியைக் கடலெனக் கூறியது மிகவும் பொருத்தமுடையதே. வேதாகமங்களும் அவ்வாறே கூறி யிருக்கின்றன. இக்கடலே மிகவும் அஞ்சத்தக்கது. அதன் தன்மையை நீ அறியும்படி கூறுகின்றேன் கேள்.

பிறவி யென்னும் பெருங்கடலானது, "பிறப்பு இறப்பு என்னும் நீரை மிகுதியுமுடையது; அறிவை விழுங்கத்தக்க காமம் என்னும் பெரிய பாம்புகளை யுடையது; விடயமாகிற ஆகாரத்தை விரைந்து புசித்துக்கொண்டு திரியும் கரணங்களென்னும் மீன் கூட்டத்தை யுடையது;' என்னினும் மேம்பட்டவரில்லை யென்கிறதாகிய பெருமித மென்கிற கம்பீர தோற்றத்தை யுடையது; வியாதிகளாகிய அழியாத புலால் நாற்றமுடையது; இடைவிடாது வரும் இன்ப துன்பங்களாகிய அலைகள் மோதப் பெற்றது. மனம் என்று சொல்லும்படியான வஞ்சகம் பொருந்திய திமிங்கிலமாகிய இராச மீன் வசிக்கப்பெற்றது; அளவுக் கடங்காத 'நான்' என்கின்ற அகங்காரமாகிய அநேக ஆமைகளை யுடையது; அறிதற் கருமையான அறியாமை யென்னும் ஆழம் பொருந்தியது; கள்ளமென்னும் விஸ்தாரமான நண்டுகளிருக்கப் பெற்றது; கலக மென்னும் விஷக்கிருமிகளை மிகுதியு முடையது; நன்மை யென்பதில்லாத தீமைகளாகிய நுரையுடையது; இன்பத்தைத் தருவதாகிய துறவு என்னும் கரையை யடையாதபடி தடுக்கும்படியான பெண்ணாசை என்னும் பெரிய சுழலை யுடையது; எமனும் பயப்படத்தக்க கொடிய கோபமென்னும் வடவா முகாக்கினியை யுடையது; அச்சத்தைத் தரும்படியான போகமென்னும் முதலைகளைப் பெற்றிருப்பது. மைந்தனே! எழு வகைப்பட்டதாகிய இத்தகைய பிறவிக்கடலின் தன்மையை அறிந்து கூற வல்லோர் யாவர்?

## பிறவிக்கடலைக் கடப்போரிவரெனல்

மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளின் வழியாக சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் பஞ்ச விடயங்களிற் சென்று அலைந்து திரும்புகின்ற அவலமாகிய புத்தியைக்கொண்டு வாத மிடும்படியான ஆறு சமயவாதிகளும் அக்கடலைக் கடக்கு மாற்றலற்றவர்களாய் அதில் விழுந்து வருந்துவோரே யாவர். அறிவு சொரூபமாகிய பிரத்தியகாத்மாவானது அழிவற்ற பிரஹ்மமாம் என்னும் சுவானுபவமாகிய மரக்கலத்தில் ஏறும் ஞானிகளே அதனைக் கடக்க வல்லவராவர்."

(தொடரும்.)




# முந்நதியும் முத்துறையும்

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி. எல்.)

பாரத நாட்டின் தென்பாலமைந்த பரந்த நிலங்களில் பண்டைக் காலந் தொட்டு வாழ்ந்துவரும் மக்கள் தமிழரே யாவர். பழுமரச் சோலைகள் செறிந்த விழுமிய தென் மலையின் செழுமையையும், மஞ் சுலாவிய மலைகளிற் பொங்கிப் பொங்கிப் பொழிந்த அருவி நீர் கஞ்சமலர்ச் சுனை கடந்து ஆறுகப் பாய்ந்த அழகினையும் கண்டறிந்த பண்டைத் தமிழ் மக்கள் வளமார்ந்த தென்னாடு வாழ்க்கைக்கு ஏற்றதாகு மென்று தேர்ந்தார்கள். ஆறுகளின் இருமருங்கும் அமைந்த காடுகளை அழித்து நாடாக்கினார்கள். "ஆறில்லா ஊருக்கு அழகில்லை" என்னும் பழமொழியும் அக்காலத்தே எழுவதாயிற்று.

## பாண்டி நாடும் வையை ஆறும்.

வேங்கடமலையை வட எல்லையாகவும குமரித் துறையைத் தென் எல்லையாகவும் கொண்டு திகழ்ந்த தமிழகம் மூன்னாடுடைய நன்னாடாய் விளங்கிற்றென்பது பழந்தமிழ் நூல்களால் இனிது விளங்கும். முடியுடை வேந்தர் மூவரது அடியின் கீழமைந்த மூன்நாடுகளும் முறையே மூந்நதிகளை உயிர் நிலையாகக் கொண்டு விளங்கிய தன்மை அறிந்து மகிழத்தக்கதாகும். பாண்டி நாடே பழம்பதியாகு மென்று முன்னோர் புகழ்ந்துரைத்த தென்னாட்டில் "வையை" என்னும் நதி பொய்யா நதியாய்ப் பொலிவுற்றிருந்தது. தென் தமிழ் நாடொன்று கல்வியிற் பெரிய கம்பர் புகழ்ந்துரைத்த "நெல்வேலி" நாட்டில் பொன் திணிந்த புனல்பெருக்கும் பொருநையெனும் திருநதி வற்றாத நதியாய் வளஞ்சுரந்தளித்தது. ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அருங் கோடையிலும் ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் உயரிய நலம் வாய்ந்த இவ் விரு நதிகளையும் புலவர்கள் பலவாறு புகழ்ந்துரைத்தார்கள். வளமார்ந்த பாண்டி நாட்டின் உயிராய் விளங்கிய வையை யாறு முற்காலத்தில் புனல் நிறைந்த பெரு நதியாய் இலங்கிற்றென்பது பழந்தமிழ் நூல்களால் இனிதறியப்படும். பைந்தமிழ் வளர்த்த பாண்டியன் நாட்டைப் பண்புறச் செய்த இவ்வாற்றின் பெருமையை;

"புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி."

என்று சிலப்பதிகாரம் அருளிய கவிஞர் செஞ்சொற்களால் எழுதிப்போந்தார்.

செந்தேன் பிலிற்றும் செழுஞ்சோலைகளினிடையே பூவாறுபோற் பொலிந்து தோன்றிய வையை ஆற்றை "புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி" என்று பெருந்தமிழ்க் கவிஞர் புகழ்ந்துரைத்த நயம் அறிந்து போற்றத்தக்கதாகும். அதிராச் சிறப்பின் மதுரை மூதூரை அலங்கரித்து நின்ற ஆற்றைத் தமிழாறு கவே கண்டு அறிஞர் உள்ளம் தழைத்தார்கள். பண்ணூர்ந்த தமிழ் கேட்டுப் பண்புற்ற வையை யாற்றின் வண்மையைப் பரிபாடல்களிற் புகழ்ந்து மகிழ்ந் தார்கள்.

## சோழ நாடும் பொன்னி ஆறும்.

இனி, பாண்டி நாட்டின் வடபாலமைந்த சோழ நாட்டை நீர்நாடாக்கிய பெருமை பொன்னி யென்னும் பொய்யா நதிக்கே உயரிதாகும். காடு கொன்று நாடாக்கி, குளந்தொட்டு வளம் பெருக்கிய "கரிகாற் சோழன்" என்னும் திருமாவளவன், காவிரியின் இருமருங்கும் கரையமைத்து நிலவளம் நிறைந்த சோழ நாட்டில் நீர்வளமும் நிலவச் செய்தான் என்று பழந்தமிழ்க் காதை பாரித்துரைக்கின்றது. இருமருங்கும் கா விரித்து, எம்மருங்கும் வளம் விரித்த காவிரியாறு கவிஞர் கருத்தைக் கவர்வதாயிற்று. அற்றாழி பசி தீர்த்து ஆருயிர் ஓம்பிய அவ்வாற்றின் பெருமையை;

"கோள் நிலைதிரிந்து கோடை நீடினும்
தான் நிலையாதிரியாத் தண்டமிழ்ப் பாவை."

என்று சீத்தலைச் சாத்தனார் செம்மைசான்ற மொழிகளாற் சிறப்பித்துப் போந்தார். அந்நதியின் நலம் அறிந்த நல்லோர், சோழ நாட்டைப் பொன்னி நாடென்றும், காவிரி நாடென்றும் புகழ்ந்துரைப்பாராயினர். அவ்வாற்றங் கரையில் அமைந்த அழகிய சோலைகளில் தோகை விரித்து ஆடிய மயில்களை யும், மறைந்து நின்று கூவிய மணிக்குயில்களையும் "இளங்கோவடிகள்" புகழ்ந் துரைக்கும் முறை புதியதோர் இன்பம் அளிப்பதாகும்.

"பூவார் சோலை மயிலாடப்
புரிந்து குயில்கள் இசைபாட
காமர் மாலை அருகசைய
நடந்தாய் வாழி காவேரி."

என்று நற்றமிழ்க் கவிஞர் நலமுறப் புனைந் துரைத்தார். வெயில் நுழையாச் சோலைகளில், குயில்கள் நுழைந்து கூவும் இனிமையும்; மஞ்சுதவழும் சோலை களில், மயில்கள் தோகைவிரித்தாடும் மாண்பும் கவிஞர் மனத்தைக் கவர்ந்து விழுங்கிய தன்மை இம்மொழிகளால் இனிது விளங்கும்.

## சேர நாடும் பேரியாறும்.

இனி மலை நாடாய சேரநாடு மலைவளம் மிகுந்த நாடென்பது சொல்லா மலே அமையும். வேழமும் வேங்கையும் விரும்பித் திரியும் மலை நாட்டில் "பேரியாறு என்னும் பெருநதி பாய்ந்து வளம் பெருக்கியது. மஞ்சுசூழ்ந்த மலையினின்றும் அழகுற வழிந்திறங்கிய அருவியின் விழுமிய காட்சியையும், அவ்வருவி நீர் பெருகி ஆறாய்ப் பரந்தோடிய பான்மையையும் கண்டு களி கூர்ந்த தண்டமிழ்க் கவிஞர்,

"நெடியோன் மார்பில் ஆரம்போன்று
பெருமலை விலங்கிய பேரி யாறு......."

என்று புகழ்ந்து மகிழ்ந்தார்.

## தொண்டை நாடும் பாலாறும்.

தமிழகத்தில் மூந்நாடுகளும் மூந்நதிகளால் வளம் பெற்றவாறு, பின்னர் தோன்றிய நன்னாடுகளும் ஆறுகளாலேயே அருஞ்சிறப்புற்றன; சான்றோர் மிகுந்த நாடென்று நல்லிசைப் புலமை மெல்லியலாராற் சிறப்பிக்கப் பெற்ற "தொண்டை நாடு" பாலாற்றின் இருமருங்கும் வளர்ந்து திகழ்வதாயிற்று. "பால் நினைந்தூட்டும் தாய்போல், நீர் சுரந்து பயிர்வளர்க்கும் நீர்மைவாய்ந்த ஆற்றினைப் "பாலாறு" என்று தமிழ் மக்கள் புகழ்ந்துரைத்த நயம் போற்று தற்குரியதாகும். இவ்வாற்றின் வண்மையாற் செழிப்புற்ற வளநாட்டின் பெருமையை;

"பாலாறு வளஞ்சுரந்து நல்கமல்கும்
பாளைவிரி மணங்கமழ் பூஞ்சோலை தோறும்
காலாறு கோலி இசைபாட நீடு
களி மயில்நின்றாடும் இயற்றொண்டை நாடு."

என்று நல்லியற் கவிஞர் நயம்சான்ற மொழிகளால் புகழ்ந்துரைத்தார். பாலாற்றின் நீர்வளத்தால் நிமிர்ந்தெழுந்த சோலைகளில் நால்வகை மலர்களும் நறுமணங் கமழும் என்றும், அம்மலர்களில் மதுவுண்டு தேக்கிய வண்டுகள் பண்ணார்ந்த பாட்டிசைக்குமென்றும், அவ்விசையினை நுகர்ந்து இன்புற்ற தோகை மயில்கள் ஓகையுற்று ஆடுமென்றும், கவிஞர் எழுதியமைத்த செஞ் சொல் ஓவியம் கற்போர் கருத்தை அள்ளுகின்றது.

## நதியே நாட்டின் உயிர்.

இவ்வாறு நானிலத்தில் நிலவும் நலமார்ந்த நதிகளை நாட்டின் உயிராகக் கருதுதல் கவிவழக்காகும். "காவிரி நாடன்ன கழனி நாட்டின்" ஆற்றணி கூறப்போந்த அருந்தமிழ்க் கவிஞராய கம்பர்;

"தாதுகு சோலைதோறும் சண்பகக் காடுதோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணற் றடங்கள் தோறும்
மாதவி வேலிப்பூக வனந்தொறும் வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும் உயிரென உலாயதன்றே."

என்று புகன்ற பொருளுரையில் இவ்வுண்மை பூத்திலங்கக் காணலாம். மரங் கள் செறிந்த காட்டு வழியாகவும், மகரந்தம் உதிரும் சோலை வழியாகவும், பூக்கள் நிறைந்த பொய்கை வழியாகவும், பூகம் நிறைந்த வனங்கள் வழியாக வும், பரந்து பாய்ந்த நதி, அந்நாட்டின் உயிர்போல் உலாவிற்றென்று கம்பர்

கட்டுரைத்த உண்மை கனிந்த நயம் சான்றதாகும். ஆகவே பழம் பெருமை வாய்ந்த எகிப்தியர் நாகரிகம் நீலநதிக் கரையில் வளர்ந்து சிறந்தாற்போன்று பழந்தமிழ் மக்களது நாகரிகம் முற்கூறிய நதிகளைச் சூழ்ந்து முளைத்தெழுந்த தென்று கருதுதல் மிகையாகாது.

## தமிழகமும் துறைமுகமும்.

இங்ஙனம் நாகரிகத் துறையில் நனிசிறந் தோங்கிய தமிழ் மக்கள் கலந் தரு செல்வமும் பெற்றுக் களித்திருந்த முறை அறியத்தக்கதாகும். நீலத் திரை சுருட்டும் நெடுங்கடலில் நாவாயோட்டி நலமுற்ற பழந்தமிழர் பெருமை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் எழுந்த நூல்களில் இனிது விளங்குகின்றது. "திரைகடலோடியும் திரவியம் தேடு" என்னும் தெள்ளிய பொருளுரை இந்நாட்டிற் பொன்னேபோற் போற்றப்பட்டது. திரைகடல் கடந்து மீண்ட மக்களைத் தீண்டத்தகாதாரென்று தமிழ் மக்கள் தள்ளிணால் லர். வேற்று நாடுகளிலிருந்து வாணிகங்கருதி வந்தடைந்த மக்களை வேறு படுத்தி வைத்தாரல்லர். கடல்கடந்து வந்த யவனரும், சோனகரும், பூம் புகார் நகராய காவிரிப்பூம் பட்டினத்தில் மணிமாட மாளிகைகள் அமைத்து, தமிழ் மக்களோடு வேற்றுமையின்றிக் கலந்துறைந்த தன்மை பழந்தமிழ் நூல் களிற் பளிங்குபோலிலங்குகின்றது. நடையுடைகளில் வேறுபட்ட யவனர், பூம்புகார் நகரில் நீரோடு நீர் சேர்ந்தாற்போல் நற்றமிழ் மக்களோடு கலந் துறைந்த அழகினைக் குறிக்கப்போந்த இளங்கோவடிகள்,

> "கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
> கலந்திருந் துறையும் இலங்கு நீர் வரைப்பும்."

என்று எழுதிப்போந்த முறை எண்ணும்தொறும் இன்பம் பயப்பதாகும்.

## கொற்கைப் பெருந்துறை.

மூன்று கவடாய் முளைத்தெழுந்த தமிழகத்தில் சிறந்த துறைமுகங்கள் முற்காலத்தில் அமைந்திருந்தன. நான்மாடக்கூடலென்று நல்லோரேத் தும் மதுரைமா நகரம் பாண்டி நாட்டின் தலை நகராய் அமைவதன் முன்னமே "கொற்கை" என்னும் துறைமுகம் மாறனுக்குரிய மணி நகராய்த் திகழ்ந்தது. "கொற்கைக் கோமான்" என்று பழந்தமிழ் நூல்கள் பாண்டியனைக் குறிக்கக் காணலாம். இக்காலத்தில் சீரிழந்த சிற்றூராகக் குறுகி நிற்கும் கொற்கை, முற்காலத்தில் பொருனை யாறு கடலொடு கலக்கும் துறையில் களித்து இலங் கிற்று. கொற்கைத் துறையில் விளைந்த முத்து கொற்றவர் முடிமேல் இலங் குவதாயிற்று. அழகினுக் கழகு செய்யக்கருதிய அயல் நாட்டு மாதர் கொற் கையில் குளித்த முத்தைக் காதிலும், கழுத்திலும் அணிந்து மகிழ்ந்தார்கள். "தென்னாடு முத்துடைத்து" என்னும் பெருமை பன்னாடுகளிலும் பரவத் தலைப்பட்டது.

## பொன்னிப் பெருந்துறை.

இன்னும் காவிரியாறு கடலொடு கலந்த துறையில் காவிரிப்பூம் பட்டினம் கவினுறத்திகழ்ந்தது. ஆழநெடுந்திரை ஆழி கடந்துவந்த கலங்கள் அத் துறையில் அழகுறக் களித்து உலாவின. கடலிற் செல்லும் கலங்களுக்குத்

துறை காட்டக் "கலங்கரை விளக்கம்" அமைந்திருந்தது. நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும், காலின்வந்த கருங்கறி மூடையும், ஈழத்துணவும், காழகத்தாக் கமும் ஏனைய அரும்பெரும் பொருள்களும் பூம்புகார்த் துறையில் மலிந் திருந்த மாண்பினைப் புலமைசான்ற மக்கள் புகழ்ந்துரைத்தார்கள். பொன்னி நாட்டைப் பொன்னுடாக்கிய கரிகால் வளவன் காவிரிப்பூம் பட்டினத்தைத் தலை நகராக்கி வாணிபச் செல்வத்தை வளர்த்தான் என்று அவன் வரலாறு கூறுகின்றது.

## முசிரிப் பெருந்துறை.

சேரமன்னன் ஆளுகையில் அமைந்த மலை நாட்டில் "முசிரித் துறை" சிறந்த துறை முகமாய் இலங்கிற்று. மலை நாட்டில் விளைந்த மிளகின் சுவை யறிந்த மேற்புல மக்களாய யவனர் முசிரி நகரில் பொன்னைச் சொரிந்து கலங்களிற் மிளகேற்றி மீண்டனர் என்று கவிஞர் புகழ்ந்துரைத்தார். மரக் கலத்தால் மாநிதியம் பெற்று மிளிர்ந்த முசிரியை, "வளங்கெழு முசிரி" என்று பாவலர் பாராட்டிப் போந்தார். இம்மூன்று சிறந்த துறைமுகங்களும் முற்காலத்திய யவன ஆசிரியர்கள் எழுதிப்போந்த சரித்திரங்களிலும் குறிக் கப்பட்டுள்ளன. தமிழ் நாட்டில் விளைந்த ஆரமும் அகிலும், அரிசியும் மிள கும், தோகையும் முத்தும், தந்தமும் தேக்கும், வெளிநாட்டு அங்காடிகளில் விலையுயர்ந்த பொருள்களாக மதிக்கப்பட்டன.

## குடியேற்ற நாடுகள்.

கருங்கடலில் அஞ்சாது சென்ற தமிழ் மக்கள், சிங்களம் புட்பகம் சாவக மாதிய தீவகங்களிலும் குடியேறி வாழ்ந்தார்கள். "தேனக்க வார்பொழில் மாநக்கவாரத்" தீவுகளிலும், மலேய நாட்டிலும் சென்று சேர்ந்தார்கள். இவ் வாறு கடல்சூழ்ந்த நாடுகளிலும் தமிழ் மணம் கமழத் தொடங்கிற்று. தமிழ் நாட்டின் பெருமை கூறப்போந்த கவிஞர் ஒருவர்;

"சிங்களம் புட்பகம் சாவகமாதிய
தீவு பலவினும் சென்றேறி—அங்குத்
தங்கள் புலிக்கொடி மீன் கொடியும் நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு."

என்று சாற்றும் மொழிகளைக் கேட்ட தமிழ் மக்கள் உள்ளம் தழைத்து நிமிர் வதாகும். கடற்கரை யோரத்திலமர்ந்த கலிங்கமென்னும் நாட்டில் வாழ்ந்த நன்மக்கள் தாய் நாட்டினின்றும் போந்து, கடல்சூழ்ந்த நிலங்களிற் பெருந் தொகையினராய்க் குடியேறினார்கள். இவர்களைப் பிறநாட்டு மக்கள் "கலிங் கர்" என்றழைத்தார்கள். கலிங்கர் என்னும் சொல் களிங்கர் என்றும், கிளிங் கர் என்றும் மாறுவதாயிற்று. இன்றும் இப்பெயர் இந்திய மக்களைக் குறிக் கும் பெயராய்ப் பல தீவங்களில் வழங்கும் பான்மை அறியத்தக்கதாகும். "முயற்சி திருவினையாக்கும்" என்னும் பொருளுரையைப் போற்றித் தூக்கம் கடிந்து தொழில் புரிந்த முற்காலத் தமிழர் வாழ்க்கை இக்காலத்திய மாந் தர்க்கு இணையற்ற ஊக்கம் அளிப்பதாகும்.

# சிறு கதை

## "சத்தியமே ஜெயம்"

(தூத்துக்குடி—T. N. ராமஸ்வாமி ஐயர்)

பிற்பகல் மூன்று மணி இருக்கும். ரங்கநாதம் பிரபுவின் மாளிகையிலோர் அறையில், அவரது பெண் லீலாவதி ஒரு புத்தகத்தைப் படித்தவண்ணமிருக்கிறாள். அவளுக்கு உத்தேசம் 22 வயதிருக்கலாம். அபாரமான எழிலைப்பெற்ற அம்மின்னாளின் கவனம் முழுவதும் புத்தகத்தில் சென்று லயித்திருந்தது.

திடீரென்று அவ்வறையின் வாசலில் ஒரு வாலிபன் தோன்றினான். அவனுக்கு 20 அல்லது 21 வயதிருக்கும். வசீகரமான முகத்தழகைப்பெற்ற அவன் முற்றிலும் அழுக்கடைந்ததும், கிழிந்ததுமான ஆடைகளையே அணிந்திருந்தான். அதிக அலைச்சலினாலும் ஆகாரக் குறைவினாலும் அவன் முற்றிலும் களைப்படைந்து பார்ப்பதற்குப் பரிதாபகரமாயிருந்தான்.

லீலாவதி அவனைக் கூர்ந்துநோக்கி "நீ யார்?" என்றாள்.

வாலிபன், "ஆஹா! உனக்குமா என்னைத் தெரிந்துகொள்ள முடியவில்லை? இது உண்மைதானா!" என்று வியப்போடு வினவினான்.



அவன் குரலைக்கேட்ட லீலாவதி மிகுந்த ஆவலோடு எழுந்து, "ஆ, தம்பி! நீயா வந்திருக்கிறாய்! உன் உருவம் முற்றிலும் மாறிப் போய்விட்டதே. உன் குரலைக் கேட்ட பிறகல்லவா உண்மை புலப்படுகிறது" என்றவளாய், அவன் இரு கரங்களையும் பிடித்துக் கொண்டு, "தம்பி! சுந்தரம், வா. உன்னைக் கண்டு வெகுகாலமாய் விட்டதால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. இப்படி உட்கார்ந்து கொள்," என்று ஒரு ஆசனத்தைக் காட்ட, வாலிபன் அதில் அமர்ந்து, "அக்கா! அப்பா எங்கே?" என்றான்.

லீலாவதி:—"தம்பி! அவர் இப்போது வீட்டிலில்லை. அயலூர் சென்றிருக்கிறார். வருவதற்குச் சில நாட்களாகும். நீ மிகுந்த களைப்புடனிருக்

கிருய். உனக்குச் சாப்பாடு கொண்டு வருகிறேன்,'' என்று, அங்கிருந்து போய் அவனுக்கு வேண்டிய உணவுடன் திரும்பினுள். மிகுந்த பசியுடனிருந்த சுந்தரம் மாதுரியமான அவ்வுணவை ஆவலோடு உண்டு எழுந்து, “அக்கா, நான் சரியாக ஆகாரமுண்டு இன்ருேடு நாலு நாட்களாகின்றன'' என்ருன்.

லீலா:—தம்பி! நீ எனக்காகப் படும் துன்பங்களை நினைக்கும்பொழுது என் மனம் பாகா யுருகுகிறது. நீ இவ்வூரை விட்டகன்று சுமார் மூன்று வருடங்களாகின்றன. உன் தோற்றத்திலிருந்து நீ நிரம்பவும் துன்புற்றிருப்பாயென்று தெரிகிறது.

சுந்:—அதை என் கேட்கிருய்? என்னைப் பிடிக்க வாரண்டு பிறந்த அன்று நீ கொடுத்த சிறிது பொருளுடன் வெளிப்பட்டு எங்கெங்கோ அலேந்தேன். சில நாட்களில் கைப்பொருளும் காலியாகவே மிகுந்த துன்பப்பட்டேன். உண்ண உணவும், உடுக்க நல்ல உடையுமின்றி நான் அடைந்த துயரங்களைக் கூறி உன் மனம் வருந்தச் செய்யேன். அதிருக்கட்டும். உன் கலியாண ஏற்பாடு எம்மட்டி லிருக்கிறது? பிரபாகரன் எப்படி யிருக்கிருன்?

லீலா:—தம்பி, மூன்று வருடங்களுக்கு முன்னுல் முதன் முதலில் சந்தித்த அவர் கூடிய விரைவில் என்னை மணஞ் செய்து கொள்வதாகக் கூறினுர். அவ் விஷயம் நீ அறியாததல்ல. ஆனுல் நீ இங்கிருந்து போன பிறகு என்னிடம் மணத்தைப்பற்றிய பேச்சே எடுப்பதில்லை. நானுக அவரைச் சந்தித்து மணவிஷயமாகப் பேச்செடுத்தாலும் அவர் அது விஷயமாக ஏதும் பேசாது போய்விடுகிருர். இதன் காரணம் என்னவோ தெரியவில்லை.

சுந்:—(கோபத்தோடு) என்ன, அவன் தன் வாக்குறுதியினின்றும் தவறிவிட்டானு? மூன்று வருடங்களாகியும் இன்னும் உன்னை விவாகம் செய்யாது நாள் கடத்தியா வருகிருன்? லீலாவதி! என்னை இக்கோலத்துக்காளாக்கிய அத்துரோகி உன்னையுமா ஏமாற்றினுன்? நான் அவனுக்குச் செய்த உதவியைக் கூட மதித்தானில்லையே!

லீலா:—தம்பி, கோபங்கொள்ளாதே. அவர் இப்பொழுது ஒருவாருக விருந்தாலும், வாக்குறுதியினின்றும் ஒருகாலும் தவறமாட்டார்; எப்படியும் என்னை மணஞ்செய்தே தீருவார். ஆனுல் நீ மட்டிலும் எனக்குச் செய்து கொடுத்த வாக்குறுதியை நினைந்து அதன்படி நடந்துகொள்ள வேண்டுகிறேன்.

சுந்:—அக்கா, நீ அவனை உன் முழு மனத்துடனும் நேசிக்கிருய். ஆனுல் அவன் உன் எண்ணத்தைப் பூர்த்தி செய்வானென்று தோன்றவில்லை. நான் எவ்வளவு கூறினுலும் உன் மனம் நம்பாது—சரி. உன் விருப்பம் போலவே என் வாழ்நாட்களை இம்மாதிரியே கடத்திவிடுகிறேன். ஆனுல் அக்கா, அத்துரோகி உன்னைமட்டிலும் ஏமாற்றுவானுனுல்—உனக்குச் செய்து கொடுத்த வாக்குறுதியினின்றும் தவறுவானுனுல்—அக்கணமே நான் என் வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்வேன்.

அவன் முகம் கோபத்தால் ஜ்வலித்தது. லீலாவதி அவன் முகத்தை ஏறெடுத்து நோக்குவதற்கே அஞ்சி மௌனமாய் நின்ருள். சற்றுநேரத்தில் சுந்தரம் அவளிடம் விடைகேட்க அவள் பெட்டியைத் திறந்து வேறு நல்ல

உடைகளும், ஒரு பணப்பையும் எடுத்துக்கொடுக்க, அவைகளை அவன் பெற்றுக்கொண்டு அங்கிருந்து மகன்றான்.

அங்ஙனம் வெளிப்பட்ட சுந்தரம் பல தெருக்களையும் கடந்து அவ்வூரையடுத்துள்ள ஒரு சோலையை யடைந்தான். அங்ஙனம் அவன் செல்லும் பொழுது அவனுக்கு அறிமுகமான பலர் அவனைக் கூர்ந்து நோக்கிச் சென்றனர். சோலையை யடைந்தவன் அங்கு மரங்கள் செறிந்த ஒரு பக்கத்தை நோக்கிச்செல்லவும், அங்கு இருவர் பேசும் குரல் கேட்டது. சத்தத்திலிருந்து அங்ஙனம் பேசுவது தன் காதலியும், பிரபாகரனுமே என்று கண்ட சுந்தரம் திடுக்கிட்டு, பலவாறு சிந்தித்து ஒரு புதரில் மறைந்து அவர்கள் பேசுவதைக் கவனிக்கலானான்.

அங்கு அழகுமிக்க ஓர் பெண்மணியும், நாகரிக உடைக ளணிந்தவோர் ஆடவனும் நின்று பேசிக்கொண் டிருந்தனர்.

ஆடவனாகிய பிரபாகரன், "பெண்ணே, பங்கஜம்! நீ கூறியவற்றையே திரும்பத் திரும்பக் கூறுவது நன்றல்ல. உன்னை விவாஹம் செய்துகொள்வதற்கு என்னிலும் தகுதியுடையவோர் புருஷனிரான். அதனால் நன்கு யோசித்து விடை கூறு," என்றான்.

பங்கஜம்:—ஐயா, நீர் மேலும் மேலும் என்னை வற்புறுத்தினால் நான் உம் பிரியத்துக்கு இணங்கி விடுவேனா? நான் ஏற்கெனவே என் மனப்பான்மையைக் கூறியிருந்தும் நீர் இங்ஙனம் வற்புறுத்துவது ஒழுங்கல்ல.

பிரபா:—பங்கஜம்! உன்னிடம் இது விஷயமாய் வற்புறுத்திக் கேட்க எனக்கு எத்தகைய உரிமையு மில்லையென் றெண்ணாதே. நீ என்னை மணக்காமல் தப்பிப் போய்விட முடியாது. உனக்குப் பிரியமிருந்தாலும் இல்லாவிட்டாலும் நீ என்னை மணந்தே தீரவேண்டும். இன்னமும் நீ ஓடிப்போன சுந்தரனை நினைத்துக்கொண்டிருப்பதில் எத்தகைய பயனுமில்லை. அவன் இனிமேல் பகிரங்கமாக வந்தாலும் அவனைக் கைதுசெய்து கொண்டுபோய் விடுவார்கள். அவன் சம்பந்தமாயுள்ள விவரங்கள் நீ அறியாததல்ல.

பங்கஜம் எத்தகைய மறுமொழியும் கூறாது மௌனமாய் நின்றாள்.

பிரபா:—சரி, பங்கஜம்! இது விஷயமாய் உன் தந்தை உன்னிடம் கூறியவற்றையும் நீ அறிந்திருப்பாய். அதனால் நன்கு ஆலோசித்து எது உத்தமமோ அவ்வழியே நடப்பாய். அதுதான் புத்திசாலிகளுக் கழகு. இல்லையேல் பின்னால் வருந்தும்படி நேரிடும்.

பங்க:—ஐயா, உமக்கு முற்றிலும் பொருத்தமுடையவளான லீலாவதியிருக்கும்பொழுது என்னை நீர் தொந்திரவு செய்வது அடாது. அவளை நீர் மணப்பதாக வெகுநாட்களுக்கு முன்னரே தீர்மானமா யிருக்கும்பொழுது நீர் இங்ஙனம் சம்பாஷிப்பது தகுதியல்ல. என் தந்தையிடம் நீர் தெரிவித்தவைகளையும் நானறிவேன். அதற்காக நான் உம்மை மணஞ் செய்வதென்பது இயலாத காரியம்.

பிரபா:—நீ அறியாததன்மையால் என் பேச்சைத் தட்டுகிறாய். லீலாவதியைம்பற்றிய விஷயங்கள் பேச்சளவில் மட்டுமேதான். அவள் எனக்கு முற்றிலும் தகுதி யற்றவள். உன் காலில் ஒட்டிய தூசிக்கும் அவள் நிகராகாள். அதனால் அவள் விஷயமாய் நீ கொண்டிருக்கும் கவலையை விட்டு

விடு. உன் தந்தையின் விருப்பப்படியே நீ என்னை மணக்கத் தவறுவை யானால் அவர் என்னிடம் பெற்றிருக்கும் கடன் தொகைகளுக்காக சிறை செல்வார். உன் வீடும் பொருளும் ஜப்தி செய்யப்படும்—இனிமேல் உனக்கு எது இஷ்டமோ அதன்படி நட. நான் போகிறேன்,'' என்று அங்கிருந்து மகன்றான்.

அவன் சொற்கள் பங்கஜத்தின் மனத்தைத் துளைத்தன. தன் காரண மாகத் தன் தந்தைக்கு நேரவிருக்கும் இடுக்கண்களை நினைத்தாள். அது விஷயமாக அவள் தந்தை அவளிடம் கூறியவற்றையும் ஆலோசித்தாள். தந் தைக்கு எத்தகைய இடுக்கணும் வராமல் காப்பாற்ற வேண்டியது தன் கடமை என்று தீர்மானித்தாள்.

மறுநிமிடம் இதுகாறும் அவர்களது சம்பாஷணையை மறைந்து கேட் டிருந்த சுந்தரம் வெளிப்பட்டான்.

''சுந்தரம்!''

''பங்கஜம்! என் அன்பே!''

இருவரும் ஆவலோடு தழுவிக்கொண்டனர். இருவர் அதரங்களும்ஒரு நீண்ட முத்தத்தில் ஈடுபட்டன. திடீரென்று பங்கஜம் விலகி நின்றாள்.

சுந்தரம்:—பங்கஜம், நான் உன் வேலைக்காரியிடம் கொடுத்த கடிதப்படி இங்கு வந்து சேர்ந்தாய்—இம்மூன்று வருடங்களாக உன்னைக் காணாது நான் பட்ட பாடுகள் நாவால் செப்புந்தரத்தினவல்ல. எத்தகைய இடுக்கண் களுக்காளானாலும் நான் இவ்வளவு தைரியத்துடனிருப்பது உன் அன்பி னாலேதான்!—ஏன் உன் முகம் வாட்டமடைந்து காணப்படுகிறது?

பங்க:—காதலரே! நற்கருமங்களைச் செய்தலையே விரதமாகக்கொண்ட உம்மனமும் இத்தகைய தீயகாரியத்தில் பிரவேசித்ததென்றால் நான் எங்ஙனம் நம்புவது! நீர் செய்தவோர் அற்பக் காரியத்தால் யாவற்றையு மிழந்து ஊரூராய் அலைந்து திரியும் காலமன்றோ உமக்கு வாய்த்தது.



சுந்த:—கண்ணே! என் பாலிய முதல் பழகிய உனக்குமா இவ்வையமுண்டாயிற்று. இதிலிருந்தே நீ என் மனப் பான்மையை உள்ளபடி அறிய வில்லை யென்று தெரிகிறது. நீ என்ன நினைத்தாலும் என்றாவது உண்மை புலப்படாமற் போகாது. அக்காலம் வரும் வரை அதை வெளியிடேன். அவ்வருவருப்பினால்தான் நீ என்மீது வெறுப்புற்று விலகி நிற்கிறாயென்று ஊகிக்கிறேன். பங்கஜம், உண்மையா?

பங்க:—அன்பரே; உம்மீது ஏற்பட்ட குற்றம் அபாண்டமானதென்று முன்னரே நான் தீர்மானித்தேனாயினும், அதை உம் வாயால் கேட்க வேண்டுமென்று கேட்டதே யொழிய வேறன்று. உம் மனம் வருந்தச் செய்த

என்னை மன்னிப்பீர். நான் உம்மை வெறுப்பதாக நீர் கூறியது முற்றிலும் பொருந்தாத விஷயம். என் மார்பை வேண்டுமாயினும் கீறிச் சோதித்துப் பாரும். அங்கு உம் உருவமின்றி வேறிருக்க இடமிருக்கிறதா வென்று பார்த்துத் திருப்திகொள்ளும்" என்று அவன் வலக்கரத்தைப்பற்றி தன் மார்பின் மீது வைத்துக் கொண்டாள். அவள் கண்களிலிருந்து முத்துக்களென இரண்டு நீர்த்துளிகள் சுந்தரம் கைமீது விழுந்தன. அவ்வளவில் அவன் அவளை ஆவலுடன் தழுவினான். கண்ணீரைத் துடைத்தான். "பங்கஜம் வருந்தாதே. உன் மனப்பான்மையை அறியாது பேசிய என்னை மன்னிப்பாய்" என்றான். பங்கஜம் அவன் கரங்களை மெதுவாக விலக்கி, "காதலரே," என்றாள். துயரத்தால் மேற்கொண்டும் சொற்கள் வெளிப்படவில்லை. கண்கள் நீரைச்சிந்தின. மீண்டும், "அன்பரே! நான் உம்மை மணக்கக் கூடாதவளா யிருக்கிறேன். அதன்.........," மேற்கொண்டு ஏதும் பேசுவதற்கியலாதவளானாள். சுந்தரம் அவளைச் சமாதானம் செய்து வினவலும், அவள், தன் தந்தையின் விருப்பத்திற் கிணங்க தான் பிரபாகரனை மணக்கப் போவதாகவும், அதற்குரிய காரணங்களையும் கூறினாள். அதைக்கேட்ட சுந்தரம் பொங்கி யெழுந்த சினத்தை மிக்க சிரமத்துடன் அடக்கிக்கொண்டு, "காதலியே! சரி உன் தந்தையின் விருப்பத்திற்கு மாறாக நடக்கும்படி உன்னை வற்புறுத்துவது நன்றல்ல. நானிதோ போகிறேன். கடவுள் கிருபையிருந்தால் நாம் அடுத்த பிறவியிலேனும்—" என்று தன் பேச்சை முடிப்பதற்குள், பங்கஜம் பொங்கி யெழுந்த தன் துயரத்தைத் தாங்கமாட்டாதவளாய் கண்ணீர் சிந்தினாள். சுந்தரமும் அவளை அன்போடு தழுவிக் கொண்டான். சிறிது நேரஞ்சென்றது. பங்கஜம், "என் அன்பின் உருவே, என்னை மன்னிப்பீர். இவ்விஷயங்களை மறந்து மனதிற்குகந்த வேறொரு மங்கையை மணந்து சுகித்திருப்பீர்," என்றாள். மறு நிமிடம் திடீரென்று அவனை விட்டு விலகி விரைவாக நடந்து மறைந்தாள். அங்ஙனம் செல்லும் போது அவள் தன் துயரத்தை அடக்க முயன்றும் அது அணையுடைத்துச் செல்லும் பிரவாகம்போல குமுறிக் கோஷித்து எழுந்ததைச் சுந்தரம் நன்கு கவனித்தான்.



பங்கஜம் தன் தந்தையின் விருப்பப்படி பிரபாகரனை மணக்க இசைந்தாள். விவாக நாளும் குறிக்கப்பட்டது. இவ் விஷயத்தை யறிந்த லீலாவதி பிரபாகரனைச் சந்தித்து எவ்வளவோ வேண்டிக்கொண்டும் அவன் விருப்பத்திற் கிணங்கவில்லை. முடிவில் லீலாவதி:—"ஐயா! நீர் தற்போது எங்கள் குடும்பச் சொத்துக்களை மேற்பார்த்து வரும்படியான பதவியைக் கொடுத்தது யாரென்று ஆலோசித்துப்பாரும். உம்பொருட்டு நான் மூன்று

வருடங்களாகக் காத்திருப்பதைச் சற்று எண்ணிப்பாரும். இவைகளை யெல்லாம் நீர் கவனியாது பங்கஜத்தை மணப்பது கூடாத காரியம். இச் செயல் இனிது நிறைவேறும்படி கடவுள் விடார். ஓடிப்போன என் தம்பி திரும்பி வந்துவிட்டான். அவன் இவ்விவரங்களை அறிவானுனல் உம் நிலைமை என்னவாகும்?—'' என்று தன் பேச்சை முடிப்பதற்குள் பிரபாகரன், "அப்படியா, அவன் வந்திருக்கிருனு? அவன் தைரியத்தை வைத்துக்கொண்டுதானே நீ கண்டபடி பேசுகிருய்! இதோ அவனைச் சிறையிலடைத்துவிட்டு மறுவேலை பார்க்கிறேன். அப்போது நீயும் அடங்குவாய்,'' என்று கோபாவேசத்தோடு கூறி வெளிப்புறப்பட, லீலாவதி அவன் கரங்களைப்பற்றிக் கெஞ்சி, அழுது முயற்சித்தவைகள் யாவும் வீணுயின.



பிரபாகரன் அவளைக் கவனியாது, தன்னறைக்குச் சென்று கீழ்க்கண்டவாறு ஒரு கடிதமெழுதினன்.

போலீஸ் கமிஷனர் அவர்களுக்கு,

மூன்று வருஷங்களுக்கு முன்னுல் தன் தந்தையின் கையெழுத்தைப் போல பொய்க் கையெழுத்திட்டு பாங்கிக்கு இருபதினுயிரம் ரூபாய்க்குச் செக் கெழுதி யனுப்பிய ரங்கநாதம் பிரபுவின் மகன் சுந்தரம், இவ்வளவு காலமாகப் போலீசார் கண்ணில்படாமல் மறைந்து திரிந்துவிட்டு தற்சமயம் இவ்வூருக்கு வந்திருக்கிருன். அவனைப் பிடிப்பதற்கு முன்னமேயே வாரண்டு பிறந்திருக்கும் விஷயம் யாவரும் அறிந்தது. அவனை இப்பொழுது எளிதில் பிடித்துவிடலாம்.

உண்மை விளம்பி.

இக் கடிதத்தைத் தபாலில் போட்டவனுய் தன் வெற்றியைக் குறித்து இறுமாந்திருந்தான்.

விவாஹ தினம் குறுகிற்று. பிரபாகரன் ஏராளமான ஆடையாபரணங்களை யணிந்து கம்பீரமாக மணப்பந்தலில் வீற்றிருந்தான். பக்கத்தே பங்கஜமும் காணப்படுகிருள். அழகுக்கு அழகு செய்வதைப்போல அவள் அபரிமிதமான ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தாலும், அவள் குதூகலமின்றி வாடிய முகத்தினளாய் காணப்பட்டாள். முறையே ஆரம்பச் சடங்குகள் நடந்து மங்கலிய தாரணம் நடக்கும் தருணமும் வந்தது.

ஆனுல் அதே நிமிடத்தில் மணப்பந்தலில் ஒரு சப் இன்ஸ்பெக்டரும் ஐந்தாறு போலீஸ் சேவகர்களும் நுழைந்தனர். அவர்கள் நடுவே சுந்தரமும்

காணப்பட்டான். போலீஸ் இன்ஸ்பெக்டர் பிரபாகரனைக்குறுகி, "அரசர் பெயரால் உம்மைக் கைது செய்திருக்கிறேன்," என்றார். அதைக்கேட்ட பிரபாகரன் பேரிடி கேட்ட நாகம்போல நடுங்கினாலும், மறுநிமிடம் சமாளித்துக்கொண்டு, மிகுந்த சினத்தோடு, "என்ன ஐயா, உங்களுக்கு புத்தியிருக்கிறதா? பெரிய மனிதனாகிய என்னை நீங்கள் இங்ஙனம் அவமானம் செய்தால் உங்களை லேசில் விடுவேனென்று நினைத்துக் கொண்டீர்களா? என்ன குற்றத்திற்காக என்னைக் கைது செய்திருக்கிறீர்கள்?" என்று வினவ, சப் இன்ஸ்பெக்டர், "நாங்கள் ஆலோசனை செய்யாது உம்மைக் கைது செய்யவில்லை. நீர் இதோ யிருக்கும் சுந்தர மென்பவரின் சிநேகத்தைப் பெற்று, அவரைக் கெடுக்க எண்ணி அவர் தந்தை கையெழுத்தைப்போல பொய்க் கையெழுத்திட்டு பாங்கிக்குச் செக் அனுப்பினீர். பாங்கி அதிகாரிகள் கையெழுத்து வித்தியாசமா யிருப்பதைக்கண்டு ரங்கனாதம் பிரபுவைக் கேட்க, அவர் அது தன் கையெழுத் தல்லவென்று கூறி அதைப்பற்றி நன்கு விசாரித்து குற்றவாளியைக் கண்டுபிடிக்கும்படி கூறலும், போலீசார் விசாரணையி லிறங்கினர். அப்போது நீர், எப்படியாவது உண்மை வெளிப்பட்டு விடுமென்றஞ்சி, முன்னரே காதலித்து மணஞ்செய்து கொள்வதாக வாக்குறுதி செய்துகொடுத்திருந்த சுந்தரம் அக்காளான லீலாவதியிடம் உம் நிலையைக் கூறிக் காப்பாற்றும்படி வேண்ட, அவள் உம்மீது கொண்ட மோகத்தால் உம்மைத் தப்புவிக்கும் நோக்கத்துடன் தன் தம்பியிடம் கூறி உம்மைக் காப்பாற்றும்படி வேண்டிக் கொள்ள, லீலாவதியின் விருப்பத்திற் கிணங்க, இவர் நீர் செய்த குற்றத்தைத் தாம் செய்ததாக போலீசாருக்கு



ஒரு கடித மூலமாய் அறிவித்துவிட்டு ஓடிவிட்டார். இவர் தந்தையும் அதையே உண்மையென்று நம்பி, உம்மை தம் சொத்தையே மேற்பார்த்து வரும்படி செய்திருக்கிறார். நீர் லீலாவதியை மணப்பதாகக் கூறி ஏமாற்றி விட்டீர். அதனால் கோபங்கொண்ட சுந்தரம் இவ்வுண்மைகளைக் கூறி செக்கிலிருக்கும் கையெழுத்தையும் பரிசோதிக்கும்படி சொல்ல, உண்மை விளங்கிற்று. இப்பொழுதாவது நாங்கள் புத்திசாலித்தனமாய் உம்மைக் கைது செய்திருக்கிறோ மென்று தெரிந்துகொண்டீரா எனலும், பிரபாகரன் முகம் வெளுத்து, தலை குனிந்து பேச வல்லமையற்றவனாய் கற்சிலைபோல நின்றான். உடனே இன்ஸ்பெக்டர் ஜவானை நோக்க அவன் பிரபாகரன் கரங்களை யிழுத்து விலங்கை மாட்டினான்.

வெளியூர் சென்று திரும்பி வந்த ரங்கநாதம் பிரபு உண்மையை உணர்ந்து தம் மகனைத் தழுவிக் கண்ணீருகுத்தார். நன் முகூர்த்தத்தில் பங்கஜத்துக்கும் சுந்தரத்துக்கும் விவாஹம் நடந்தேறியது.

# பெண்களின் நிலை

(ரா. மு. கிருஷ்ண பாரதி, அம்பை)

### முன்னுரை

"பேதமை யென்பது மாதர்க் கணிகலம்" என்பது நந்தமிழ் நாட்டில் வழங்கிவரும் பழமொழிகளில் ஒன்று. இப் பழமொழியை இயற்றிய மகான் யாரோ தெரியவில்லை. அது யாராயினும் சரி, இப் பழமொழியானது பெண்களுக்கோர் அடாத பழிமொழியாகவே யிருக்கிறது என்பது மட்டும் உறுதி. பெண்கள் யாவரும் பேதைகளா? அங்ஙனமாயின் அவர்களிடமிருந்து ஜனித்த ஆடவரும் பேதைகளன்றோ? ஆகவே பெண்கள் பேதைகளல்லர்; மற்று, அவர்கள் அறிவில் ஆடவர்க்குச் சற்றும் குறைந்தவரல்லரென்பது கண்கூடு.

ஆதி காலந்தொட்டு, நம் பாரத நாட்டில் பெண்மணிகள் ஆடவரைப் போலவே பல துறைகளிலும் முன்னேற்ற மடைந்தவர்களாய் இருந்து வந்திருக்கின்றனர். நமது நாட்டிலே ஆரியர் செல்வாக்குடன் விளங்கிய காலத்தில், பெண்மணிகள் தற்போது நமது சகோதரிகளிற் பலரைப்போல் சமையலறைச் சுவர்களினிடையே சிறைவாசம் செய்யவில்லை. ஆனால் பரந்த அறிவும் விரிந்த நோக்கமும், உயர்ந்த வீரமும் கொண்டு விளங்கினர். சின்னஞ் சிறு வயதிலேயே தமது புதல்வர்க்கு வீரப்பாலூட்டிய பெண்மணிகளைப்பற்றி நீங்கள் கேட்டதில்லையா? போரிற் புறங்கொடுத்தோடிய பேடிகளைப் பெரு வீராக்கிய பூவைகளைப்பற்றிப் படித்ததில்லையா? கற்பைக் காக்கத் தீக்குழியில் மூழ்கி உயிர் துறந்த உத்தமிகளைப்பற்றி அறிந்ததில்லையா? இவை யெல்லாம் ஏன் சொல்லுகிறேன்? நமது பழம் பெருமைகளைப்பற்றித் திரும்பத் திரும்பச் சொல்லி கர்வங் கொள்வதற்கல்ல—எவ்வளவோ உன்னத ஸ்தானத்திலிருந்த நாம் எவ்வளவு கேவலமான நிலைமைக்கு வந்திருக்கிறோம் என்றுணர்ந்து, நமது தாழ்மையான நிலையினின்று மறுபடியும் மேன்மையுறத் தக்க வழியைப் பின்பற்றுவதற்கேயாம்.

### பெண் சுதந்தரம்.

'இந்தியாவில் பெண்களுக்குச் சுதந்தரமே கிடையாது. அவர்கள் யாவரும் அடிமைகள்' என்பது வெள்ளைச் சீர்திருத்தக்காரர்கள் கட்டிவிட்ட பொய் மூட்டைகளில் முதன்மையானது. அதனை யாதரித்து நமது கருப்புச் சீர்திருத்தக்காரர்களும் பிரமாதமாகக் கூச்சல் போடுகிறார்கள். இந்தியாவில் வெளிக்கு நமது சகோதரிகள் பராதீனர்களாயிருப்பது உண்மையே. ஆனால் உண்மையில் அவர்களுக்குள்ள செல்வாக்கு அனந்தம். இதில் எதாவது சந்தேகமிருந்தால் நீங்களே உங்கள் நெஞ்சில் கைவைத்து யோசியுங்கள். வீட்

டில் உங்களைவிட உங்கள் மனைவியர்க்கு அதிகச் செல்வாக்குண்டு என்பதை நன்குணர்வீர்கள்.

பெண்களுக்கு எவ்விதமான சுதந்தரம் தேவை யென்பது அடுத்த கேள்வி. சுதந்தரம் என்றால் தான்தோன்றித்தனமாகத் திரிவது என்று யாராவது எண்ணினால், அதைப்போன்ற பெரிய தவறு வேறொன்றுமில்லை. மேனாட்டு வெள்ளைப் பண்டிதர்கள் தங்கள் நாட்டுப் பெண்களுக்குள்ள சுதந்தரத்தைப்போல் இந்தியாவில் இல்லையென்று பறைசாற்றுகிறார்கள். உண்மையில் அவர்கள் நாட்டுப் பெண்மணிகளின் மிதமிஞ்சிய சுயேச்சையால், மாதர்கள் தங்களுக்குத் தாங்களே பெரிய படுகுழி தோண்டிக் கொள்கிறார்கள் என்பதை இப்பண்டிதர்கள் கவனிக்கிறார்களா? இன்றைக்கு ஒருவனுடன் கலியாணம், மறுநாள் விவாக விலக்கு. அன்றே வேறொருவனுடன் கூடி வாழ்தல், மறுபடியுமோ விவாக விலக்குத்தான். என்னே கலிகாலக் கொடுமை! இவர்கள் மக்களா மாக்களா? இது மட்டுமோ? மேனாட்டு நாகரிகத்தில் மூழ்கியதன் பயனாய் மிதமிஞ்சிய சுயேச்சையால் பாழடைந்த பாரத புத்திரிகளும் பலராவர்.

ஆகவே, நம் சகோதரிகளுக்கு அவ்விதமான சுதந்தரமானது தேவையற்றதும் தீமை பயப்பதுமாகும். கணவன் தீய வழியிற் புகுந்தால் அவனைக் காப்பாற்றும் சுதந்தரம் நம் நங்கையர்க்கு அமைய வேண்டும்; குழந்தைகளைச் சிறந்த வழியில் நடத்தும் சுதந்தரம் அவர்களுக்கு வேண்டும்; அநீதியையும் பாவத்தையும் எதிர்பார்த்துப் போராடும் சுதந்தரம் வேண்டும்; இல்லறத்தைக் செவ்வனே நடத்தும் சுதந்தரமும் அவர்களுக்கு வேண்டும்.

பெண்மணிகள் புருஷர்களுக்கு—இன்று நேற்று அல்ல—பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகவே வாழ்க்கைத் துணைவிகளாகவும், துன்பத்தில் தேறுதல் கூறும் உண்மைத் தோழிகளாகவும், வீட்டரசிகளாகவும் இருந்து வந்திருக்கின்றனர். அவர்களது உதவியின்றேல் கோடிக் கணக்கான ஜனங்கள் பட்டினியால் மாளவேண்டியதே. நிழலின் அருமை வெய்யிலில் தெரியுமென்பர். மாதர்களின் சிறந்த பணிவிடைகள் அவர்கள் கண்மூடிவிட்ட பிறகே நன்கு விளங்கும். குடும்பத் தலைவி இறந்துவிட்டால், கணவன், குழந்தைகள் முதலியோர் படும்பாடு செப்புந் தரமன்று. தாயில்லா வீடு பாழன்றோ?

இன்னும், விதை விதைத்தல், நாற்று நடுதல், அறுவடை செய்தல் முதலிய உழவுத் தொழிலாகிய உயிர்த் தொழிலிலும் நம் பெண்மணிகள் அரிய சேவை செய்து வருகிறார்கள். பண்டைக் காலத்தில் நம் பாரத நாட்டில் நெய்யப்பட்ட, உலகப் பிரசித்திபெற்ற ஆடைகளிற் பெரும்பாகம் நம் இந்தியப் பெண்களால் நெய்யப்பட்டனவே. இன்று நிகழும் சத்தியப் போரிலாகட்டும், அன்று நிகழ்ந்த அறச்சமரிலாகட்டும், நம் பாரதமாதர்கள் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டனர் என்பது தேற்றம். இன்னும் பெண்களே ஆடவர்க்குச் சிறந்த மதியூகிகளாயும் விளங்குகிறார்கள். "தையல் சொற் கேளேல்" என்றாள் ஒரு கிழவி. "சேலை கட்டிய மாதரை நம்பினால்............" என்றிழுத்தார் ஒரு கவிராயர். இவை சில சமயங்களில் சில மாதர்களுக்குப் பொருந்துமே யன்றி, நெடுக இதே பாட்டைப் பாடுவது சற்றும் பொருந்தாது.

ஆகவே, இத்தனை மகிமை பொருந்திய மாதர் மணிகளுக்கு மிதமிஞ்சிய சுயேச்சை யென்னும் கொடிய விஷத்தைக் கொடுப்பதற்குத் தூண்டுவதோ, துணை செய்வதோ, அனுமதிப்பதோ, பெருத்த அநீதியும் மகா பாதகமும் ஆகும். அடிமைத்தனமின்றி, மட்டுக்குட்பட்ட சுதந்தரத்துடன் சிறந்த வாழ்க்கைத் துணைவிகளாகவும், கிருக லக்ஷிமிகளாகவும் விளங்கி, நம் சகோதரிகள் பெரும்புகழ் படைத்த பாரத நாட்டின் பழஞ் சிறப்பை நிலைநிறுத்துவார்களாக.

## பெண் கல்வி

கல்வியே நம்நாட்டில் மிகவும் கவனிக்கப்பட வேண்டிய விஷயமாகும். அதிலும் பெண் கல்வியில் எவ்வளவு கவனம் செலுத்தினலும் தகும். ஆதலின் அதனைப்பற்றிச் சற்று ஆராய்வோம்.

பெண்களுக்கு எத்தகைய கல்வி தேவை? தற்போது நம்நாட்டுச் சிறுமிகளுக்குக் கற்பிக்கப்படும் கல்வியானது சிறிதும் ஏற்றதல்ல. மற்று, தீமையே பயக்கிறது தென்று சொல்வது மிகையாகாது. பெண்கள் கல்வி கற்க வேண்டுமென்றால், இந்திய மாணவரைப்போல் எம். எ., பி. ஏ. முதலிய பட்டங்கள் பெறவேண்டுமென்று அர்த்தமில்லை. அவ்விதம் செய்தலானது ஓர் அளவு அவர்களது நாசத்திற்கே அடிகோலுவதாகும். கணவன உத்தியோகம் செய்து பொருளீட்டுவதும், மனைவி கிருக காரியங்களைப் பார்ப்பதுமாகிய விதியே இயற்கையின் சட்டமாகும். அதற்கு மாருக நடக்கும் எவரும் இயற்கை விதிப்படி தண்டனை யடைபவர்களே—அதனை யனுபவிப்போரும் மிகப் பலராவர்.

எனவே, பெண்களுக்குக் கற்பிக்கப்பட வேண்டிய கல்வி, அவர்கள் வாழ்க்கையிற் பிரயோசன மளிப்பதா யிருக்கவேண்டும். தையல் வேலையில் தேர்ச்சி பெறுவது நம்மாதருக்கு மிக நலமாகும். வீட்டுக்கணக்கு எழுதுதல், கணவனுக்குக் கடிதம் எழுதுதல், சாதாரணமாகத் தடையின்றி நன்னூல்களை வாசித்தல் முதலிய காரியங்களுக்குப் போதுமான கல்வியும் அவர்களுக்கு அவசியமாகும். பக்திரசம் பொருந்திய இனிய பாடல்களைச் சௌகரியமானல் வீணை அல்லது ஹார்மோனிய சுருதியுடன் பாடக் கற்பித்தல் நம் சிறுமிகளுக்கு மிகவும் நன்மை பயப்பதாகும். எல்லாவற்றிற்கும் மேலாக, ஆரோக்கியமாக எவ்விதம் குழந்தையை வளர்ப்பது என்பதும் கற்பிக்கப்பட வேண்டிய தவசியம். குழந்தைக்கு ஏற்ற ஆகாரம், அவற்றிற்கு வரும் வியாதிகள், அவற்றை எளிதிற் குணப்படுத்தும் லேசான கைமருந்து முறைகள் முதலியவைகளை நம் பெண்மணிகள் அறிந்திருந்தால் எவ்வளவு நன்மையாயிருக்கும்! வீண்கவலையும், சிரமமும், அகால மரணமும் பெண்களின் அறியாமையாலேயே பெரும்பாலும் சம்பவிக்கின்றன. ஆதலின் ஒவ்வொரு இந்திய சகோதர சகோதரிகளும் தீவிரமாக முயன்று பெண்களுக்கேற்ற கல்வி முறையை நிலைநாட்டுவது அவ்சியத்தினும் அவசியமாகும்.

## பாலிய விதவா விவாகங்கள்

பாலிய விவாகமென்றால் என்ன? வயது வராத ஆண் பெண்கள் காம இன்பம் நுகரச் செய்வதே பாலிய விவாகம் எனலாம். இது நம் இந்தியாவில் மட்டுமல்ல, உலக முழுதிலுமே பரவி யுளது. உதாரணமாக, அமெரிக்காவில்

பள்ளிக்கூடத்திற் படிக்கும் பெண்கள் துர்நடத்தையால் கருப்பவதிகளாய் விடு கின்றனர். அவர்களுக்குச் சிகிச்சை செய்வதற்கென்று பிரத்யேகமான ஆஸ் பத்திரிகளும் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன.

பாலிய விவாகத்தால் விளையும் தீங்குகள் சொல்லுந் தரமல்ல. பாலப் பருவத்தைக் கடவாத பெண்கள் பெறும் குழந்தைகள் எவ்விதம் ஆரோக்கிய மாகவோ, நீண்ட ஆயுள் உள்ளனவாகவோ இருக்கக்கூடும்? தக்க வயது வரு முன்னம் கருப்பமாகிப் பிரஸவிக்க மாட்டாது இறந்து பட்ட பெண்மணிகள் பல்லாயிரமாவர். மிகவும் குறைந்த வயதுள்ள ஒரு பெண் ஒரு குழந்தை யைப் பெற்று அதனைப் பாதுகாத்தல், வீட்டுக்காரியங்களைக் கவனித்தல், கணவனுக்குப் பணிவிடை செய்தல் ஆகிய எல்லாவற்றையும் கவனிக்க முடி யாது தவிக்கிறாள். கடைசியில் குழந்தையையும் பறிகொடுத்துத் தானும் நோய்வாய்ப்பட்டு மரிக்கிறாள்.

குழந்தையா யிருக்கும்போதே கலியாணம் செய்விக்கப்பட்ட சிறுவனது நிலைமையும் இப்படியே பரிதாபகரமானது. அவனது பள்ளிப்படிப்பு பாழடைகிறது. அவன் மனைவி, அவனுக்குக் கேவலம் வேசியைப் போலாகி விடுகிறாள். அவன் சிறுவயதிலேயே தன் பலத்தை இழந்து பரிதவிக்கிறான். இந்த அழகில் அவன் வெகு சீக்கிரத்தில் ஓர் குடும்பியாகி விடுகிறான்; குழந்தை களுக்கும், தனக்கும், மனைவிக்கும் வேண்டிய தேவைகளைப் பூர்த்தி செய்ய அவனால் இயலுவதில்லை. இவ்வளவு துன்பப்பட்ட நிலையில் அவனும் நோயால் மாள்வது ஓர் ஆச்சரியமா? அந்தோ! பரிதாபம்! மதிகெட்ட பெற்றோர்கள் செய்த கொடுமைதான் என்னே! அவர்கள் தங்கள் குழந்தைகளுக்கு அமுத மென்று நினைத்து நஞ்சைக் கொடுக்கிறார்கள். என்னே மதியீனம்!

அடுத்தபடியாக விதவாவிவாகத்தைப் பற்றிச் சிறிது சொல்லிவிட்டு இக் கட்டுரையை முடித்துவிடுகிறேன். இவ்விஷயத்தில் தற்கால வைதிகர்களின் மனப்பான்மை அநீதமான தென்றே சொல்லவேண்டும். ஒரு புருஷன் மனைவி இருக்கும்போதோ, இறந்த பிறகோ தனக்கு இஷ்டமான மனைவிகளைக் கலியாணம் செய்துகொள்ளலாம். ஆனால் ஒரு பெண்ணோ—அவள் எத்தனை வயதுள்ளவளாயிருந்தாலும் சரி—தன் கணவன் இறந்துவிட்டால் வெளியில் கூட கழுத்தை நீட்டக்கூடாது. அவள் மறு விவாகத்தைப் பற்றி நினைப் பதே கொடிய பாவம்! நரகம்! சாஸ்திர விரோதம்! என்னே நீதி!

நான் சொல்லுவதைப் பலர் ஆதரிக்காமலிருக்கலாம். ஆனால் அவர்க ளும், "நமது வாழ்க்கைத் துணைவிகளாகிய பெண் மணிகளை இவ்வளவு கேவ லமாக நடத்துதல் நியாயமா?" என்று தங்களைத் தாங்களே கேட்டுக் கொண் டால், அப்போது இரக்கமுள்ள எந்த நெஞ்சும் பச்சாத்தாபப்படுமென்பதில் ஐயமில்லை. இல்லறமாகிய வண்டியில் ஆண் பெண்கள் இருவரும் இரண்டு அச்சாணிகளாவர். அங்ஙனமிருக்க, ஆண்கள் எத்தனை முறை வேண்டுமாயி னும் மணம் செய்யும் சுதந்தரமுடையவராயிருக்கும்போது பெண்களுக்கு மட்டும் அது மறுக்கப்பட்டது பெருத்த அநீதமாகும். அவர்கள் விரும்பினால் மறுமணம் செய்துகொள்ளாமலிருக்கலாமே யன்றி, அவர்களாகச் செய்து கொள்ள விரும்பும்போது அதனைத் தடுப்பதற்கு நமக்கு எவ்வித உரிமையு மில்லை.

முன்காலத்தில் 'உடன்கட்டை யேறல்' என்னும் வழக்கம் நம் நாட்டில் இருந்துவந்தது. கணவனிடமுள்ள அதிகமான அன்பினால் அவர்களுடனேயே உயிர் நீத்தனர் அவ்வுத்தமிகள்! ஆனால், அக்காலத்தில் உடன்கட்டையேறாமல் இருக்கவும் ஸ்திரீகளுக்குப் பூரண சுதந்தரமிருந்த தென்பது கவனிக்கவேண்டிய விஷயமாகும். உதாரணமாக, பாண்டு இறந்தபோது குந்தி உடன்கட்டை ஏறவில்லை. தசரதர் இறந்த பின்பும் அவரது மனைவியர் உயிர் வாழ்ந்திருந்தனர். எனினும், நாட்கள் செல்லச் செல்ல, இது ஒரு வழக்கமாகிக் கடைசியில் உயிர்விடச் சம்மதியாத பெண்களும் பலவந்தமாகத் தீக்கிரையாக்கப்பட்டனர். கடைசியாகத் துரைத்தனத்தாரின் பெருமுயற்சியாலேயே இக்கொடிய வழக்கம் ஒழிந்தது. என்றாலும் நம் இந்திய விதவைகள் சிறைவாசம் செய்வதுபோல் அடைபட்டுக் கிடக்கிறார்கள். அவர்களிற் பலர் வாழ்க்கை மணமே அறியாதவராவர். ஆதலின் மறுமணம் செய்துகொள்வதற்கு அவர்களுக்கு ஆவல் இருப்பது இயற்கையே. அதைத் தடுத்து நிற்கும் எவரும் சமூகத்துரோகிகளாவர். ஆதலின், திக்கற்ற நம் இந்தியச் சகோதரிகள் மறுமணம் செய்துகொண்டு வாழ்க்கை நடத்துவதை யாவரும் ஆதரித்து நிற்கவேண்டு மென்று வணக்கமாய்க் கேட்டுக்கொண்டு இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

---

# ஓர் கடிதம்.

*Gudamalai,—30-6-32.*

மகா-ா-ா-ஸ்ரீ, சென்னை ஆனந்தபோதினி ஆபீஸ் மானேஜர் அவர்கள் சமூகங்களுக்கு, A. B. ச. நெ. 8962. V. வேலாயுதய்யர் நமஸ்காரம் செய்து எழுதும் கடிதம்.

(1) ஆனந்தபோதினி மாத சஞ்சிகையில் பிரசுரிக்கும் பஞ்சாங்கம், 18-வதாண்டு முதல் ஒவ்வொரு மாதத்திலும் அந்தந்த மாதத்து பஞ்சாங்கத்தையே பிரசுரம் செய்தால் நலமாயிருக்குமென்று நண்பர்களின் சார்பாக கேட்டுக்கொள்ளுகிறேன்.

(2) ஆனந்தன் வேறு பத்திரிகைகளைப்போல் சந்தாவை (உடனுக்குடன்) உயர்த்திக்கொண்டு போகாமல், குறைந்த சந்தாவுக்கு 17 ஆண்டுகளாக ஆனந்தத்தைப் புகட்டி வந்திருப்பதும் இனிமேலும் ஆனந்தன் அப்படியே செய்வானென்றும், நண்பர்களின் சார்பாக என்னுடைய மனமார்ந்த வந்தனத்தை ஆனந்தனுக்கு அளிக்கிறேன்.

(3) நான் 17-வதாண்டு முதல்தான் சந்தாதாரனாகச் சேர்ந்தேன். நாளது வரையில் ஆனந்தத்தைப் புகட்டிவரும் ஆனந்தபோதினிக்கு முன்னமேயே சந்தாதாரனாகச் சேராததைப்பற்றி கவலைப்படுகிறேன்.

ஆனந்தன் நீடூழிவாழ்க.

V. VELAYUTHIER,
Gudamalai, Atur, Salem.

# பூவுலகை மயக்கும் பொக்கைவாய்ப் புன்னகை.



(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை பாடியன)



இன்னா செய்தாரை ஒறுத்திடுதல் அவர்
நாண நயம் இயற்றலென்ன
சொன்னார் முன் வள்ளுவனார்; சொல்லதனுக்(கு)
இலக்கியமாய்த் துலங்குகின்றார்
நன்னாட்டக் காந்திமகான்; நகைச்சுவையால்
பகைவர்களும் நவில் செருக்கை
உன்னாது வசப்படுதல் உறுதியெனும்
உண்மை அவர் உணர்த்தினாரே! (1)

சிறைக்குச் சென்றபினர் சிறு குழந்தைப்
படைதெருவில் திரண்டு 'காந்தி
மாமன்' என மதித்தவரை 'மாமாவோ'
என அழைத்து மகிழ்ந்து சூழும்;
பூமி முற்றும் மயக்குகின்ற பொக்கைவாய்ப்
புன்னகையில் பொலியுஞ் சீர்மை
நாமுரைக்கும் தரத்ததுவோ? நவில் 'சிறுவர்
தோழர்' நகை நவில்வதேயோ? (2)

'அணியழகு வெண்மை ஒளி அமை பற்களே
சிரிப்புக்(கு) அழகாம்' என்பர்;
மணிமொழி சொல் காந்தி மகான் மலர்ப்
பொக்கை வாய் அதனை மதிக்கவில்லை!

பணிவறியாச் செருக்கினரும் பாலர்களும்
மாதர்களும் பகைவர் தாமும்
தணிப்பரிய ஆர்வமொடு சார்ந்தனரே
காந்தி நகை தனில் மயங்கி. (3)

அன்பர் மனம் துள்ள அடிக்கடி கொள்ளைச்
சிரிப்பைச் செய் அடிகள் காந்தி
துன்பு மிகு சோதனைகள் சூழ்கின்றபோதும்
மனம் துளங்கிடாமல்,
முன்பற்க ளிலேயேனும் முறுவலிலே
குறைவின்றி முக(ம்) மலர்ந்து
இன்பப் புன்னகை புரியும் இனியதொரு
காட்சியினை இயம்பப்போமோ? (4)

முனிவர் மோகனதாசின் மோகனப்
புன்னகையினிலே மூளும் இன்பம்
தனித்ததொரு சிறப்பினதாம்; 'சஞ்சலங்கள்
பலவாகச் சார்ந்தபோதும்,
மனிதர் முகம் கோணாதே மகிழ்ந்து நகை
புரிவதுவே மனத்தைத் தேற்றும்
இனிய வழி' என்பதனை எல்லீரும்
உணர்ந் தின்பம் எய்துவீரே! (5)

நெஞ்சினிலே கரவின்றி நெருக்க நிலையிலும்
துன்பம் நேர்ந்திடாமல்
வஞ்சியரும் ஆடவரும் மகிழ்ந்து நகை
புரிவாரேல், வருத்தம் யாவும்
துஞ்சிடுமே; வினை எதுவும் துயரின்றிக்
கூடும்; மனம் தூய்மையாகும்:
அஞ்சலில் காந்திச் சிரிப்பால், அவர் பெற்ற
நலமனைத்தும் அறிந்திடுவீரே! (6)

# விசித்திர விநோதம்

## "நல்ல மோட்டார்கார்"



ஒரு புதுப் பணக்காரருக்கு மோட்டார்கார் வாங்க வேண்டும் என்ற ஆசை பிறந்தது. கம்பெனிக்குச் சென்ருர். கம்பெனி மானேஜர் ஒவ்வொரு காரின் விசேஷங்களை யெல்லாம் விசாலமாகச் சொல்லிக்கொண்டேவந்தார். எனினும் பிரபுவுக்குத் திருப்தி ஏற்படவில்லை. பிரபு கேட்கிருர்:

"நீங்கள் சொல்லுவதெல்லாம் சரிதான். ஆனல் இந்த வண்டிக்குக் காலையில் ஒரு தடவை மட்டும் சாவி கொடுத்தால் அந்த நாள் முழுதும் ஓடுமா?"

***

## "ருசிகரமான விஷயம்"



பத்திரிகை ஏஜண்டு:—"நீங்கள் ஏன் எங்கள் பத்திகைக்குச் சந்தாதாரராகச் சேரக்கூடாது? அதில் அநேக ருசிகரமான விஷயங்கள் வெளிவருகின்றனவே!"

மற்றவர்:—"ருசிகரமான விஷயங்களா? நான் தங்கள் பத்திரிகையில் ஒரு நாளாவது ருசிகரமான விஷயங்களைப் பார்த்ததில்லை. ஆனல் போன வாரம்தான் மிகவும் ருசிகரமானதொன்றைப் பார்த்தேன்."

"அது என்ன?"

"அதில் அரைச்சேர் ஹல்வா யாரோ கட்டிக் கொண்டுவந்து கொடுத்தார்கள்."

### "ரகஸியம்"



சமீபத்தில் கலியாணமான பெண்:—"இவ்வளவு நாளாக நான் ஒரு ரகஸியத்தை உங்களிடம் சொல்லாமல் மறைத்துவைத்திருந்தேன். இனி, என்னால் சொல்லாமல் இருக்கமுடியவில்லை. என் தகப்பனார் இறக்கு முன் கொஞ்சகாலம் பைத்தியமாக இருந்தார்."

கணவன்:—"அப்படியா? அதற்கென்ன பரவா இல்லை, என் தகப்பனாரும் சிறிது காலம் பைத்தியமாக இருந்தார். எனக்குங்கூட ஒவ்வொரு சமயத்தில் புத்தி மாறாட்டம்போல் வருவதுண்டு."

***

ஒருவன்:—"நம் கிருஷ்ணனுக்கு என்ன உத்தியோகம்?"

மற்றவன்:—" 'புக்கீப்பிங்' உத்தியோகம்! என் புஸ்தகத்தை வாங்கிக் கொண்டுபோய் ஒரு வருஷம் ஆகிறது. இதுவரை இன்னும் திருப்பிக் கொடுக்கவில்லை."

***

### "அன்பு"



கணவன்:—"நீ பிச்சைக்கு வந்தவனுக்கெல்லாம் ஒவ்வொரு குண்டா சோறு போட்டு அனுப்புகிறாயே— அவர்களால் உனக்கு என்ன லாபம்?"

மனைவி:—"அவர்கள் உங்களைப் போல் முணு முணுக்காமலும், எந்தவிதமான குறையும் சொல்லாமலும் சாப்பிடுவதைப் பார்க்க எனக்கு மிகவும் சந்தோஷமாயிருக்கிறது.

***

வாத்தியார்:—"ஆறு காய்கறிகளின் பேரைச் சொல்"

மாணவன்:—"ஐந்து கத்தரிக்காய் —ஒரு வெண்டைக்காய் சார்."

***

பையன்:—"நான் ராமனோடு விளையாடட்டுமா?"

தாய்:—"அவனோடு விளையாடுவது எனக்கு இஷ்டம் இல்லை."

பையன்:—"ஆனால் அவனுடன் சண்டைபோடச் சொல்லுகிறாயா?"

## "களைப்பிற்கு மருந்து"

மதுவிலக்குப் பிரசாரகர்:—"இங்கே நான் அரைமணி நேரம் பிரசங்கம் செய்திருக்கிறேன். அதற்குள் எவ்வளவு களைப்புத் தோன்றுகிறது!"

குடிகாரன்:—"இரண்டு மொந்தை போட்டுக் கொண்டீர்களானால் களைப்பில்லாமல் இன்னும் இரண்டுமணி நேரம் பிரசங்கம் செய்யலாம்."

***

ஒருவர்:—"உனக்கு எப்போதாவது மோட்டார் ஆபத்து நேர்ந்திருக்கிறதா?"

மற்றவர்:—"மூந்தாம்நாள்தான் நேர்ந்தது, நான் மோட்டார்காரில் பீச்சுக்குப் போயிருந்தபோது என்னுடைய வீட்டுக்காரியுங்கூட அங்கே காணப்பட்டாள்."

***

## "சீப்பு"



வாத்தியார்:—"என்னடா பைத்தியக்காரன் மாதிரி தலைவிரி கோலமாய்ப் பள்ளிக்கூடத்திற்கு வந்திருக்கிறாய்? உன்னிடம் ஒரு சீப்பு இல்லையா?"

பையன்:—"சீப்பு காணாமற் போய் விட்டது சார்!"

வாத்தியார்:—"உன் அப்பா தாசில் தாராமே அவர் சீவிக் கொள்ளுகிற சீப்பாவது இருக்குமல்லவா?"

பையன்:—"எங்கள் அப்பாவுக்கு வழுக்கைத் தலை சார்!"

***

குப்பன்:—"உன்னைப் போலவே எனக்கும் முன்பு தாடியிருந்தது. மிகவும் அவலக்ஷணமாயிருக்கிறது என்று அதைச் சிறைத்துவிட்டேன்."

சுப்பன்:—"முன்பு உன் முகத்தைப் போலவே என் முகமும் இருந்தது. அது அவலக்ஷணமாகக் காணப்பட்டதால்—அதை மறைக்கத் தாடியை வளர்த்திருக்கிறேன்."

### "க்ஷவரம்"

பெரியவர்:—"இது என்னடா அப்பா! முகமெல்லாம் காயமும் கட்டுமாயிருக்கிறதே!"

காயம்பட்டவர்:—"நீங்கள் சிபார்சு செய்த பார்பர் சலூனில் போய் க்ஷவரம் செய்து கொள்ளும்போது, அந்த அம்பட்டனுக்குக் காக்கை வலிப்பு வந்துவிட்டது.

***

தந்தை:—"அடே முட்டாள்! ஏண்டா அந்தக் கிழவனைக் கண்டு அப்படி முகம் சுளித்து முறைத்துப் பார்க்கிறாய்?—குற்றம் அல்லவா?"

பையன்:—"அவர் என்னைக் கண்டு முகஞ்சுளித்து முறைக்கிறாரே."

தந்தை:—"அவர் முகஞ்சுளித்து முறைக்கவில்லை. எப்போதும் அவரது முகம் அப்படித்தான்.

***

### "ஞாபகம்"



நண்பர்:—"என்னப்பா! உன் தொப்பியைக் கையில் எடுத்தேன்—ஏதோ தேள் கொட்டிய மாதிரி நறுக்கென்று குத்திவிட்டது!"

மற்றவர்:-"ஓஹோ! அது வேறொன்றுமில்லை. என் பையனுக்கு ஒரு தொப்பி வாங்கி வரவேண்டும் என்று பல தடவை சொல்லியும் நான் மறந்துபோய் விட்டதால்—இந்தத் தடவை எனக்கு நினைவூட்ட என் மனைவி இத் தொப்பியில் ஒரு குண்டூசி குத்திவைத்திருந்தாள். நல்ல வேளை ஞாபகப்படுத்தினாய்!

***

மாஜிஸ்ட்ரேட் ஒரு வேலைக்காரனை வீட்டு வேலைக்கு அமர்த்தினார்.

வேலைக்காரன்:—"சம்பளம் என்ன எஜமான்?"

மாஜிஸ்ட்ரேட் (பரத்தியானியாய்):—இருபது ரூபாய்—தவறினால் ஒரு மாதம் சிறைவாசம்."

## "சம்பள உயர்வு"



குமாஸ்தா:—"நான் வேலை பார்த்து வருவதற்கு எனக்குச் சம்பளம் உத்தரவாகக் கேட்டுக் கொள்கிறேன்."

செட்டியார்:—"நீர் இப்போது என்ன சம்பளம் வாங்கி வருகின்றீர்?"

குமாஸ்தா:—"நான் கடந்த மூன்று மாதங்களாகச் சம்பளமில்லாமல் வேலை பார்த்து வந்திருக்கிறேன்."

செட்டியார்:—"அப்படியானால் உம்முடைய சம்பளத்தை இரட்டிப்பாக்கி யிருக்கிறேன். இனி 6-மாதம் சம்பளமில்லாமல் வேலை பார்க்கலாம்.

***

ஒருவன்:—"நிலத்தில் விதை விதைத்திருக்கிறாய் அல்லவா? அவைகளைப் பக்ஷிகள் வந்து எடுத்துக்கொண்டு போகமலிருக்கத் திருஷ்டி பொம்மை (கோமாளி) வைக்க மறந்துவிட்டாயே!"

குடியானவன்:—தேவை இல்லை. நான் எப்பொழுதும் இங்கேயே இருக்கிறேன்.

***

"வக்கீல்:—"இது உன் கையெழுத்தல்ல என்கிறாயா?"

சாக்ஷி:—"அல்ல"

வக்கீல்:—"உன் கையெழுத்து இதைப்போலேனும் இருக்கிறதா?"

சாக்ஷி:—"இல்லை"

வக்கீல்:—உன் கையெழுத்து எப்படியிருக்கிறது என்று பார்க்க மாதிரிக்கேனும் எழுதிக் காட்டுவாயா?"

சாக்ஷி:—"எழுதிக் காட்ட முடியாது."

வக்கீல்:—"ஏன்?"

சாக்ஷி:—"நான் தற்குறி—எழுதப் படிக்கத் தெரியாது."

***

எஜமான்:—"உன் சம்பள விஷயம் ரகஸியமாயிருக்கட்டும். யாரிடமும் சொல்லாதே."

குமாஸ்தா:—' சொல்லமாட்டேன் எஜமான். இந்த விஷயத்தில் உங்களுக்கு எவ்வளவு வெட்கமோ அவ்வளவு வெட்கம் எனக்கும் உண்டு."

***

குப்பன்:—"அதோ அங்கே போகிற மனிதரைப் பார்த்தாயா? அவர் ஜயத்தினால் எவ்வளவோ பொன் சம்பாதித்தார். பிறகு கோடீஸ்வரரானார்."

சுப்பன்:—"நானும் அப்படியே செய்தேன். எனக்கும் ஆறு வருஷம் கடின காவல் தண்டனை கிடைத்தது."

## "வெட்கம்"

பஞ்சாயத்துக் கோர்ட்டு பிரஸிடெண்டு:—"இவ்விடத்தில் மறுபடியும் வந்து நிற்பதில் உனக்கு வெட்கமில்லையா?"

குற்றவாளி:—எஜமான்க ளெல்லாம் சதா இங்கேயே இருக்கும் போது அடியேனுக்கு என்ன வெட்கம்?"

***

மாஜிஸ்ட்ரேட்:—"சொந்தக்காரருக்குத் தெரியாமல் அவரது ஜேபியில் இருந்த கடிகாரத்தை எப்படி எடுத்தாய்?"

கைதி:—"எங்கள் தொழில் ரகசியத்தை நான் சொல்லமாட்டேன் எஜமான்!"

***

## "தைரியம்"



கணவன்:—"நீ ஒரு சுத்தப் பயங்கொள்ளிப் பெண்! சீக்கிரம் நடந்து போய் திருடர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்று பார். நான் பின்னால் வரும்போது உனக்கென்ன பயம்? என் கையில் ஒரு விளக்கு மாத்திரம் இருந்தால்............

***

பெரிய மனிதர்:—"உங்கள் காய்கறிக் கடைக்காரன் நல்லவன்தானா?"

மற்றவர்:—"ஆஹா! சந்தேகம் என்ன? மிகவும் உதாரகுண முள்ளவன். நான் ஒரு வீசைக் கத்தரிக்காய் அனுப்பு என்றால் இரண்டு வீசை அனுப்பி வைக்கிறான்.

***

பெரிய மனிதர்:—"உங்கள் வீட்டில் வேலை செய்கிறவன் எப்பேர்ப்பட்டவன்?"

மற்றவர்:—நன்றாகச் சாப்பிடுகிறான், ஜீரணமும் ஆகிவிடுகிறது. ஆனந்தமாய்க் கவலையற்றுத் தூங்குகின்றான்."




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்.)

(தொகுதி-17, பகுதி-12, 959-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிறகு அவளுடைய கண்களைப் பரீட்சித்துப் பார்த்தேன். இதில் ஒரு அதிசயத்தைக் கண்டேன். நான் அறைக்குள் நுழையும் போதெல்லாம் இரண்டு கண்களிலும் பிரகாச மிருந்தது. ஆனால் இப்பொழுது கவனிக்கும்போது ஒரு கண்ணின் பிரகாசமே போய் விட்டது. இன்னொரு கண்ணில் பிரகாசம் இருந்துகொண் டிருந்தது.

இந்த வித்தியாசத்தினாலேயே அவள் கொலை செய்யப்பட்டிருக்கிறா ளென்கிற கொடிய உண்மையை யறிந்து கொண்டேன். இந்தக் கொலையைப் பூர்ணலிங்க முதலியார் செய்திருக்கும் பட்சத்தில் உண்மையில் இவர் மிக சாமர்த்தியமாகவே தன் வேலையைச் செய்திருக்கிறாரென்றும், இவர் சாஸ்திர ஆராய்ச்சியில் கைதேர்ந்தவரா யிருக்கவேண்டுமென்று மறிந்து கொண்டேன்.

ஆ! என்னை இன்றே மணஞ் செய்துகொண்ட மீனாள்—அந்த மின்னாள்—இன்றே என் கண்முன் இறந்து போய் விட்டனள். என்னே என் துரதிர்ஷ்டம்!

நான் அவளுடைய அங்கங்களை யெல்லாம் பரீட்சை செய்துகொண்டு வரும்பொழுது அவளுடைய தலையணையின் கீழ் ஒரு கசங்கின கடித மிருந்ததைக் கவனித்து அதை எடுத்தேன். அந்தக் கடிதத்தில் பெயரையுங் காணோம்; ஊரையுங் காணோம். "**நான் சாரதாவைக் கண்டேன்**" என்ற வார்த்தைகள் மட்டுமே அதில் காணப்பட்டன. கையெழுத்து ஒரு ஸ்திரீயினுடையதாகக் காணப்படவில்லை.

இந்த சாரதா யார்? இவளுடன் சந்தித்தது சந்தோஷகரமான விஷயமா? அல்லது துக்ககரமான விஷயமா? 'நான் சாரதாவைக் கண்டேன்' என்று மட்டுமே எழுதப்பட்டிருந்ததே யல்லாது வேறு ஒன்றையுங் காணோம். இந்தக் கடிதத்தை யாரிட மிருந்தோ மீனாள் வாங்கிக்கொண்டு அதை இரகசியமாகப் படுக்கையின் கீழ் மறைத்து வைத்திருக்க வேண்டுமென்று யூகித்தேன்.

இன்னு மேதாவது என்னுடைய மனைவியைப்பற்றிய விஷயம் அகப்படுமோ வென்று அந்த அறை முழுவதையும் சுற்றிப் பார்த்தேன். அந்த

அறையின் ஜன்னலில் ஒரு நீலநிறமான புட்டி யிருந்தது. அது மருந்து புட்டி யென் றறிந்துகொண்டேன். அதில் என்ன மருந்து இருக்கிறது என்பதைக் கவனிப்பதன் பொருட்டு முகர்ந்து பார்த்தேன். க்ளோரோபாம் (Chloroform) என்னும் போதை மருந்தெனக் கண்டேன். இந்த போதை மருந்து மீனுளுக்குக் கொடுக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும் பிற்பாடு கொலை நடந்திருக்க வேண்டுமென்றும் யூகிக்க வேண்டியதா யிருந்தது.

பத்து நிமிஷங்களுக்கு முன்பாக எனக்கு ஒருவித மயக்கமும், நெஞ்சிலும் வாயிலும் ஒருவித வலியும் ஏற்பட்டது என்றும் சொன்னேனல்லவா. இதே விதமான வலி இப்பொழுதும் என்னிடத்தி லேற்பட்டது. உதடுகள் வீங்கிப் போயின. எனக்கு உண்டான மயக்கத்தினுல் கீழே விழுந்து விடுவேன் போலிருந்த படியால் என்னுடைய மனைவியின் கட்டிலைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டேன்.

என்னுடைய உடல் முழுவதையும் தீ பற்றிக்கொண்டாற்போல் அவ்வளவு எரிச்சல் கொடுத்தது. என்னுடைய மூளை குழம்பியது. என்னுடைய கைகால்கள் உயிரற்றுப் போய் விட்டன. இந்த வலியினின்றும் மயக்கத்தினின்றும் தப்பித்து விடவேண்டுமென்று என்னுலான வரையில் உடலை இப்படியு மப்படியுமாக வளைத்து நெளித்துக் குனிந்து நிமிர்ந்து பார்த்தேன். ஒன்றிலும் பயனில்லை. என்னுடைய தேகத்தில் ஆயிரம் தேள் கொட்டுவது போலிருந்தது. என்னுடைய அதரங்கள் அசைக்க முடியாமற் போய்விட்டன.

என்னுடைய மூளை குழம்பினுலும் என்ன நடந்தது என்பதைப் பொறுமையுடனும் ஸ்வாதீனத்துடனும் கவனித்துப் பார்த்தேன். ஆ! என்ன அக்கிரமம்! நான் இந்த நிலைமையிலிருப்பதன் காரணம் சபாபதி முதலியார் கொடுத்த சுருட்டை யுபயோகித்ததே. அந்த சுருட்டில் விஷங் கலக்கப்பட்டிருக்கவேண்டும்.

கடைசியாக என்னுடைய கொடிய விரோதிகளுக்கு நான் இரையாகவே விழுந்து விட்டேன். என்னுடைய அதரங்கள் நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகமாக வீங்குவதைப்பார்த்தால் இந்த விஷம் எனக்கு மரணத்தையே உண்டாக்கி விடுமென்று தீர்மானித்து விட்டேன்.

அப்பால் இதே நிலைமையில் இரண்டு நிமிஷங்கள் வரை இருந்திருப்பேன். பிறகு என்னுல் நிற்கவும் முடியாமற் போய் விட்டது. எங்கு பார்த்தாலும் தேகவேதனை யதிகமாகி விட்டது. என்னுலும் தாங்க முடியாமல் "கிரீச்" என்று உரக்கக் கத்தினேன். என்னுடைய கால்கள் என்னைத் தாங்க முடியாமல் பலமற்று வளைந்தன. ஸ்வாதீனமும் கெட்டு விட்டது. பொத்தென்று வேரற்ற மரம்போல் கீழே விழுந்து விட்டேன். அப்பால் என்ன நடந்ததென்று எனக்குத் தெரியாது.

---

## 3-வது அத்தியாயம்

---

### கப்பல் பிரயாணம்

என்ன ஆச்சரியம்! அப்பால் நான் கண் திறந்தபோது நடு சமுத்திரத்தில் ஒரு கப்பலிலிருந்ததாகக் கண்டேன். அலைகள் 'ஹோ' வென்று சப்

தித்துக்கொண்டிருந்தன. நானிருந்த விடத்திற்கு சூரிய வெளிச்சம் ஒரு ஜன்னலின் வழியாக வந்துகொண்டிருந்தது.

என் மனைவி கொலை செய்யப்பட்ட விடத்திலிருந்து திடீரென்று இக் கப்பலுக்கு மாற்றப்பட்டிருக்கிறேன்! உண்மையில் என்னுடைய நிலைமை என்னுலேயே நம்பமுடியாமலிருந்தது. கப்பலில் ஒரு அசுத்தமான இடத்தில் நான் எனக்குத் தெரியாமலே படுத்திருந்து இப்பொழுது கண்விழித்தேன். என்னுடைய தாங்கமுடியாத ஆச்சரியத்தில் எனக்கு நடப்பவைகளெல்லாம் கனவுதானோ வென்று சந்தேகிக்க ஆரம்பித்துவிட்டேன். ஆனால் என் தேகத்தில் உள்ள வலியும் அதாங்கள் பெருத்திருப்பதும் எனக்கு நடந்தவைகளைக் கனவல்ல, உண்மையிலும் உண்மையே யென நிச்சயப்படுத்திவிட்டன.

அதிக சிரமத்துடன் நான் படுத்திருந்த விடத்தைவிட்டெழுந்தேன். அக்கொடியன் சபாபதி முதலியார் கொடுத்த சுருட்டை யுபயோகித்ததினுலேயே இவ்வளவு கஷ்டங்களும் நேரிடுகின்றன வென்று என் மனம் நிச்சயமாக எண்ணியது. நான் சற்று தேகபலமுள்ளவனுதலால் மீறித்தப்பிவிட்டேன். இதே சுருட்டை இன்னொருவன் பிடித்திருப்பானுகில் இந்நேரம் யமனுலகமே சென்றிருப்பான்; ஆட்சேபனையில்லை!.........சரியான ஸ்வாதீனம் வந்தவுடன் மெதுவாக நடந்து நானிருந்த அறையின் கதவைத் திறக்க முயன்றேன்; திறக்க முடியவில்லை; என்னை அந்த அறைக்குள் போட்டு யாரோ பூட்டிவிட்டிருக்கிறார்கள்!

மிக்க மனக் கஷ்டத்துடன் ஓரிடத்தி லுட்கார்ந்துகொண்டு என்னுடைய நிலைமையைப் பற்றி நானே யோசிக்க ஆரம்பித்துவிட்டேன். என்னுடைய யோசனையில் நான் என் மனைவியின் கழுத்திலிருந்து எடுத்த வைர மாலையின் ஞாபகம் வந்தது. தற்சமயம் அது என்னுடைய ஜேபியில் பத்திரமாக இருக்கிறதா வென்று கவனித்தேன். அந்த வைரமாலை இன்னமும் என் ஜேபியிலேயேயிருக்கக் கண்டு அதை யெடுத்து நிதானமாய்ப் பார்த்தேன். அது விலை மதிக்கக்கூடாத சிறந்த வைரங்களால் சரியாக ஜோடிக்கப்பட்ட மகா உன்னதமான ஆபரணமாகக் காணப்பட்டது. வைரங்கள் டால் வீசி என் கண்களைப் பறித்தன. கொலை செய்யப்பட்ட என் மனைவியின் ஞாபகார்த்தமாக உள்ள இந்த வைர மாலையைப் பார்க்கப் பார்க்க என் தலை 'கிர்' என்று சுற்ற ஆரம்பித்துவிட்டது. நான் பத்திரமா யெடுத்துக்கொண்ட சிறிய கடிதம் பத்திரமாகவே என்னிடமிருந்தது. இக்கடிதத்திலுள்ள எழுத்துக்கள் ஒரு ஆண் பிள்ளையினுடையதாகவே காணப்பட்டன. மேலும் இந்த எழுத்துக்களை எழுதின பேர்வழி நன்றாக எழுதப் படிக்கக் கற்றறிந்திருக்க வேண்டுமென்பதும் நன்கு புலப்பட்டது. **"நான் சாரதாவைக் கண்டேன்."** இது சாமானிய சமாச்சாரமோ அல்லது பயமுறுத்தலான வார்த்தைகளோ அல்லது பாதுகாப்பாகச் சொல்லப்பட்ட விஷயமோ எனக்குக் கொஞ்சமும் புரியாமலிருந்தது. ஆனால் இந்த சாரதாவைக் கண்டுபிடித்துவிட்டால், இந்த வார்த்தைகள் எழுதப்பட்டதன் காரணத்தையும் இந்தக் கடிதத்தை என் மனைவி தன் படுக்கையின் கீழ் பத்திரமாய் வைத்துக்கொள்ளவேண்டியதன் காரணத்தையும் அறிந்துகொண்டுவிடலாம். ஆனால் சாரதா யார்? சாரதாவை எப்படிக் கண்டுபிடிப்பது?

# சிறுமணித் திரட்டு.

இந்தியாவில் 350-பாஷைகள் வழங்கி வருகின்றன.

* * *

கெனியா நாடு சென்ற ஆண்டில் வெட்டுக்கிளிகளை அழிக்க லக்ஷம் பவுன் செலவிட்டதாம்.

* * *

இன்ஷியூரன்ஸ் கம்பெனிகள் முதன் முதலில் இங்கிலாந்தில்தான் ஸ்தாபிக்கப்பட்டனவாம்.

* * *

"டிஸிடிஸி" என்னும் பூச்சி, கொசுக்களைவிட மகாக் கொடியதாம். அதன் கடி மனிதர்கட்கும், மிருகங்கட்கும் "தூக்க ஜுரம்" என்னும் ஒரு வகை வியாதியை உண்டாக்குமாம். இது உயிர்போக்கும் வியாதியாம்.

* * *

தற்கால ஆங்கிலப் பெண்கள், சுமார் நாற்பதாண்டுகட்கு முன்னிருந்த பெண்களைவிட—அவரவர்கள் உயரத்திற்கேற்றவாறு ஆறுமுதல் ஒன்பது ராத்தல்வரை கனத்தில் குறைந்திருக்கிறார்களாம்.

* * *

அமெரிக்காவில் 118-சதுர மைலுக்கு ஒரு பாங்கியும், ஐரோப்பாவில் 11-சதுர மைலுக்கு ஒரு பாங்கியும், ஜப்பானில் 23-சதுர மைலுக்கு ஒரு பாங்கியும், இந்தியாவில் 2,735-சதுர மைலுக்கு ஒரு பாங்கியும் இருக்கிறது.

* * *

அந்தமான் தீவுகளில் வசிக்கும் சுதேசிகளின் உயரம் 4½-அடியாம். அவர்களின் ஜனத்தொகை 6000. ஆப்பிரிக்கா சுதேசிகளைப் போலவே மிகுந்த வலிமையுடையவர்களாயும், கருமை நிறம் வாய்ந்தவர்களாயும் இருக்கின்றனராம். அவர்களிடம் நாகரிக மனிதர்களைக் கண்டவுடனே கொன்று விடும் வழக்கம் இருந்து வருகிறதாம்.

* * *

ஆண்களைவிடப் பெண்களே அதிகப் புத்திசாலிகள் என்று ஸர். வில்லியம் என்பவர் கூறுகின்றார்.

* * *

தன் தகப்பனாரின் குடிப்பழக்கத்தை ஒழிக்க, நாபுகோ என்ற ஜப்பானியப் பெண் தற்கொலை செய்து கொண்டாளாம்.

* * *

சர்வ தேசச் சங்கத்தில், புதிதாக ஒரு பிரிட்டிஷ் கம்பெனி கட்டிவரும் புத்தகசாலையிலுள்ள பீரோத் தட்டுகளின் நீளம் 30-மைல்களாம்.

* * *

இந்தியாவில் குழந்தைக் கலியாணங்கள் அதிகமாயிருப்பதுபோல் ஐரோப்பாவில் தாத்தா—பாட்டிக் கலியாணங்கள் அதிகமாயிருக்கின்றனவாம்.




**அற்புதப் பெண்:**—பிறவியிலேயே செவிடும், ஊமையும், குருடுமான ஸ்ரீமதி ஹெலன் செல்லா என்ற அமெரிக்க மாது இங்கிலீஷ், பிரஞ்சு, ஜெர்மன் முதலிய பாஷைகளில் தேர்ச்சி பெற்றிருக்கிறாராம். டைப் அடிப்பதிலும் சிறந்தவர். நீந்துவதிலும் பழக்கம். நூலாசிரியர். பேசுபவர்கள் இவரது தொண்டையில் விரல் வைத்துக்கொண்டு பேசினால் பேசும் விஷயத்தை நன்றாக அறிந்து கொள்ளுகிறாராம். இவர் இங்கிலாந்து—கிளாஸ்கோ சர்வகலா சாலையில் பட்டம் பெறச் சென்றிருக்கிறாராம்.

***

ஆங்கிலநாட்டில் ஒரு பசு 354-நாட்களில் சுமார் 30,000 பவுண்டு நிறையுள்ள பால் கொடுக்கிறதாம். அஃது ஒரு வருஷத்தில் கொடுக்கும் பாலின் நிறை பசுவின் நிறையில் இருபது மடங்குக்குச் சமமாகிறதாம்.

***

**"கலைமகள்":**—லண்டனில் மின்னிக்வின்ஸ் என்ற 19-வயதுப் பெண் ஆறு வாரத்திற்குள் பிரஞ்சு, இத்தாலி, ஜெர்மன் ஆகிய மூன்று பாஷைகளையும் கற்றுத் தேர்ந்து விட்டாராம். இவரது தாய் மொழி ஆங்கிலம். எல்லோரும் இவரது திறமையைக்கண்டு அதிசய மடைகிறார்கள்.

***

**"பிரளயம் தப்பியது":**—மே மாதம் 14-ந்தேதி பில் என்ற சிறிய கிரகம் பூமியைத் தாக்குவதால் பூமி அழிந்து விடும் என்று வான சாஸ்திரிகள் மிகுந்த கவலையுடன் நோக்கி யிருந்தார்கள். ஆனால் பில் சிறிது விலகிப் போனதால் பூமி உயிர்தப்பியதாம். "பில்" நான்கு மைல் குறுக்களவு உள்ளதாம். அது அறுபது லக்ஷம் மைல்கள் விலகிப்போய் விட்டதாம். ஆனால் வானசாஸ்திரிகள் அளவுப்படி இது மிகவும் சுருங்கிய தூரமாம். இந்த "பில்" இன்னும் சிறிது நெருங்கி வந்து அட்லான்டிக் அல்லது பசிபிக் சமுத்திரத்தில் விழுந்திருந்தால் கடல் பொங்கி வந்து பூமியில் வெள்ளம் புரண்டு உயிர்களை அழித்திருக்கும். அது நீரில் விழாமல் நிலத்தில் விழுந்திருந்தால் அதனால் பெருந் தீப்பிடித்து உலகத்தையே சாம்பராக்கி யிருக்கும்.

***

சூரியன் குறுக்களவு 8,6,000-மைல்களாம். சில நக்ஷத்திரங்களின் ஒளி இன்னும் பூமியை எட்ட வில்லையாம். நிமிஷத்திற்குப் பல்லாயிரக் கணக்கான மைல் வீதம் பாய்ந்து வரும் நக்ஷத்திர ஒளி இன்னும் வந்து சேரவில்லையானால் இந்த நக்ஷத்திரங்கள் எவ்வளவு தூரத்தில் இருக்கின்றன என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

ஆங்கீரஸஹு ஆவணிமூ—கலியுகாதி 5034, சாலிவாகனம் 1855,

பசலி 1342, கோல்லமாண்டு 1108, ஹிஜுரி 1351,

இங்கிலீஷ் 1932ஹு ஆகஸ்ட்டுமூ—செப்டம்பர்மூ

| ஆவணிமீ | ஆகஸ்ட்டு | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | செவ் | பௌ18-0 | அவி46-53 | சி46-53மா | விஷ்ணுபதி புண்ணிய காலம், யஜுர் உபாகர்மம், ஆவணி அவிட்டம் |
| 2 | 17 | புத | பிர18-10 | சத49-15 | சி49-15அ | கரிநாள், காயத்ரி ஜெபம் |
| 3 | 18 | வியா | துதி19-40 | பூர53-10 | சித்60 | அசூன்ய சயன விரதம் |
| 4 | 19 | வெ | திரி22-40 | உத்58-20 | சி58-20அ | சர்வ முகூர்த்தம் |
| 5 | 20 | சனி | சது26-58 | ரே60 | மா60 | சங்கட சதுர்த்தி [ய |
| 6 | 21 | ஞா | பஞ்32-10 | ரே4-45 | அ4-45சி | சர்வமுகூர்த்தம்,உழவு செய் |
| 7 | 2[illegible] | திங் | சஷ்38-10 | அஸ்11-50 | சித்60 | விவாகம், யாத்திரை செய்ய |
| 8 | 23 | செ | சப்44-[illegible] | பர18-30 | சித்60 | கி❋ (ஆலய அனுஷ்டானம்) |
| 9 | 24 | புதன் | அஷ்49-43 | கி❋[illegible]6-18 | அ25-18சி | கிருத்திகை விரதம், கரிநாள் |
| 10 | 25 | வியா | நவ54-18 | ரோ32–50 | மா60 | ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி |
| 11 | 26 | வெ | தச57-28 | மிரு37-58 | சித்60 | |
| 12 | 27 | சனி | ஏகா58-58 | திரு41-30 | சித்60 | |
| 13 | 28 | ஞா | து58-48 | புன43-25 | சித்60 | |
| 14 | 29 | திங் | திர56-43 | பூச43-38 | சித்60 | |
| 15 | 30 | செவ் | சது53-8 | ஆயி42-15 | சித்60 | |
| 16 | 31 | புத | அ●48-30 | மகம்39-33 | சி39-33அ | |
| 17 | 1 | வியா | பிர42-35 | பூரம்35-55 | சி35-55மா | |
| 18 | 2 | வெ | துதி36-8 | உத்31-30 | சி31-30அ | |
| 19 | 3 | சனி | திரி29-18 | அஸ்26-38 | மா60 | |
| 20 | 4 | ஞா | சது22-23 | சித்21-40 | சித்60 | |
| 21 | 5 | திங் | பஞ்15-33 | சுவா16-53 | அ16-53ம | |
| 22 | 6 | செவ் | சஷ்9-15 | விசா12-28 | மா12-28சி | சூரிய சஷ்டி, சம்பா சஷ்டி |
| 23 | 7 | புதன் | சப்3-20 | அனு8-35 | சித்60 | தூர்வாஷ்டமி, ஜேஷ்டா |
| | | | அஷ்58-15 | | | கௌரி பூஜை, அவமாகம் |
| 24 | 8 | வியா | நவ54-13 | கே5-30 | பி5-30சித் | நந்த நவமி, ஆவணி மூலம் |
| 25 | 9 | வெள் | தச50-58 | மூல3-20 | அ3-20பி | க்ஷீர விரத ஆரம்பம் |
| 26 | 10 | சனி | ஏகா48-48 | பூரா2-8 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி [ந்தி |
| 27 | 11 | ஞா | து47-50 | உத்1-58 | அமி60 | கல்கி துவாதசி, வாமன ஜய |
| 28 | 12 | திங் | திர47-53 | திரு2-53 | அமி2-53சி | சிலருக்கு பிர-ருக்-உபாகர்ம |
| 29 | 13 | செவ் | சது46-38 | அவி5-0 | சித்5-0மா | அனந்த விரதம் [ணம் |
| 30 | 14 | புத | ○51-28 | சத8-5 | சித்8-5அ | பௌர்ணமி, சந்திர கிரஹ |
| 31 | 15 | வியா | பிர55-0 | பூர12-23 | சித்60 | கன்னிரவி நா-51-28, மாளயபக்ஷ ஆரம்பம் |

1932ஞு செப்டம்பர்மீ

| | | | |
|---|---|---|---|
| | | | செவ் சுக் |
| ராகு | 4-கட-வக்-பு<br>17-கடக-சுக்<br>19-சிம்ம-புத<br>25-கட-செவ் | | சூ-பு குரு கே |
| சனி | | | |
| | | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.